

# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது- மாசி - 2024 - மார்ச் - இணைய வழி - மலர்-1 - இதழ்-7

காசி விசுவனாதர் - சம்போ பூஜை அலங்காரம் (நகரத்தார் கட்டளை)

# திருநெல்லை

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது – மாசி

2024–மார்ச்

இணையவழி மலர் 1 – இதழ் 7

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்


# பொருளடக்கம்

பக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

# புண்ணிய பூமி காசி



காசிக்கும் தமிழகத்திற்கும் நெருங்கிய ஆன்மீகத் தொடர்பு உண்டு. புண்ணிய காசியில் அருள்மிகு விஸ்வநாதர் திருக்கோவில் சார்பாக ஒரு அன்ன சத்திரம் கட்டி , அதனைத் தமிழகத்தைச் சார்ந்த, நமது காசி நாட்டுக்கோட்டை நகர சத்திர மேலாண்மைக் கழக நிர்வாகத்தின் வாயிலாக அன்னதானம் வழங்கப்பெற்று வரப்பெறுகின்றது இங்கு நாள்தோறும் ஐநூறு முதல் அறுநூறு வரையான பக்தர்கள் மதிய உணவு அன்னதானமாகப் பெறுகிறார்கள். இதற்கு மாதந்தோறும் ரூபாய் மூன்று லட்சம் வரை செலவாகிறது. அண்மையில் அன்னதானம் பெறுவோர் எண்ணிக்கையை இரண்டா யிரமாக உயர்த்த கோவிலில் இருந்து வேண்டுகோள் வைக்கப்பட்டது.



இதனோடு நாளொன்றுக்கு மூவாயிரம் பேருக்கு அன்னபிரசாதமாக பெட்டி வடிவத்தில் அடைக்கப்பெற்ற உணவுப் பொதியைத் தரவும் வேண்டுகோள் வைக்கப்பெற்றது.

இதுகுறித்து நம் கோவிலூர் மடமும் காசி நாட்டுக்கோட்டை சத்திர மேலாண்மை கழகமும் கலந்து பேசும் நல்வாய்ப்பு அமைந்தது. கோவிலூர் மடம் இதற்கென்று தனியாக ஒரு அறநிலையை ஏற்படுத்துவது என்றும் அன்ன சத்திரத்தை புதிதாக ஏற்படுத்துகின்ற அறநிலை வாயிலாக நிர்வாகம் செய்வது என்று முடிவு செய்யப்பட்டது.

அந்த அடிப்படையில் கோவில் தலைமை நிர்வாக அதிகாரிக்கு புதிதாக நாம் ஏற்படுத்திய காசி விஸ்வநாதர் கோவிலூர் பவுண்டேஷன் என்ற அறநிலை வாயிலாக ஒரு விண்ணப்பத்தை சமர்ப்பித்தோம். அந்த விண்ணப்பம் இப்போது காசி விஸ்வநாதர் கோவில் அறநிலையின் பரிசீலனையில் உள்ளது. விரைவில் அவர்கள் இது குறித்து நல்ல முடிவு எடுப்பார்கள் என்று நம்பிக்கை நமக்கு இருக்கிறது.

இது தொடர்பாக இரண்டு மூன்று முறை நாம் காசிக்கு செல்ல வேண்டி வந்தது அவ்வாறு செல்லும்போது காசி விசுவநாதருக்கு, சப்தரிஷி பூஜை நடத்திக் கொண்டிருக்கின்ற ” குடு பாண்டா” என்ற தலைமை குருக்கள் நம்மை அழைத்து, மூன்று கால பூஜைக்கு நகரத்தார் சந்தனம் கொடுக்கிறீர்கள், ரிஷி பூஜைக்கும் நீங்கள் சந்தனம் கொடுக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். காசி விசுவநாதர் நம்மிடம் சந்தனம் கேட்பதாக நாம் உணர்ந்தோம். உடனடியாக, தற்காலிகமாக காசி விசுவநாதரின் சந்தனத்துக்குரிய தொகையைக் கொடுப்பது என்றும் இரண்டு மாதங்களில் நாமே சந்தனம் அரைத்துக் கொடுப்பது என்றும் முடிவெடுத்து அதற்கான பணிகள் நடைபெற்றுவருகின்றன. மார்ச் மாதம் ஒன்றாம் தேதி முதல் நாள் ஒன்றுக்கு முன்னூறு கிராம் சந்தனம் மற்றும் ஒரு கிலோ நெய் கொடுக்க ஆரம்பித்து உள்ளோம் இந்த அறத்தில் பிறரும் பங்கு கொண்டால் நன்றாக இருக்குமே என்று சில அன்பரிடம் கேட்டபோது உடனடியாக பதினைந்து அன்பர்கள்



அதில் பங்கு கொள்வதற்கான பணத்தை அனுப்பி விட்டார்கள். இப்போது சந்தனம் அரைக்கும் எந்திரம் ஒன்று வாங்குவதற்கு ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது.

இவ்வாறு காசி விசுவநாதருக்குச் சந்தனம், விளக்கிற்கு நெய் தர இறைகருணை அருள் கூட்டியுள்ளது. மேலும் தானத்தில் சிறந்த தானமான அன்னதானத்தை நாளும் ஆயிரக்கணக்காக பக்தர்களுக்கு செய்யும் வாய்ப்பும் கோவிலூர் மடத்திற்கு உள்ளது. எல்லாம் இறைவன் செயல்.

புண்ணிய பூமி காசியில் உள்ள அசி காட் என்ற பகுதியில் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னால் நாச்சியப்ப சுவாமிகள் மடம் கட்ட வேண்டும் என்ற எண்ணத்தில் இரு இடங்களை வாங்கினார். அந்தப் பகுதி தாழ்வான வெள்ளம் சூழும் பகுதி என்று அரசாங்கம் அறிவித்தபடியால் அங்கு நிலையான கட்டடம் கட்டுவதற்கான அனுமதி கிடைக்கவில்லை ஆகவே தற்காலிக கட்டடமாக சிறு கட்டடங்கள் கட்டி அங்கு சாதுக்கள் தங்கி சிவப் பணிகளை செய்து வருகின்றனர். அங்கும் இப்போது நாள்தோறும் நூற்று ஐம்பது பேர் வரை அன்னதானம் பெற்று வருகின்றனர். அந்த தற்காலிக அமைப்பினை சற்று விரிவுபடுத்தி, நாள்தோறும் ஆயிரம் பேர் வரை உணவு தயாரித்து அன்னதானம் செய்யலாம் என்ற எண்ணத்தை நமக்கு காசி விசுவநாதர் ஏற்படுத்தியுள்ளார். நம் இடம், கங்கை கரையில் இருப்பதால் கங்கை நீரையே நாம் சமையலுக்கு பயன்படுத்துவதற்கு அனுமதி கிடைக்குமா என்று முயற்சி செய்து கொண்டிருக்கிறோம். அவ்வாறு கிடைக்கப்பெற்றால் கங்கை நீரில் சமைத்த பிரசாதம் என்ற அடிப்படையில் அந்த அன்னதானம் பெருஞ் சிறப்பு பெறும். இந்த கங்கை அன்னதான திட்டம் சித்திரை மாதத்தில் துவங்குவதற்கான முயற்சிகள் நடைபெற்றுவருகின்றன.

காசியின் கங்கைக் கரையில் எல்லாம் வல்ல சிவனின் அடியார்க்கு கங்கை அன்னதானம் செய்யும் வாய்ப்பு கோவிலூர் மடத்திற்குக் கிடைத்திருப்பது பேரானந்தத்தைத் தருகிறது. இவை அனைத்தும் சிவன் ராத்திரியை ஒட்டி நடப்பதும் இன்னும் ஆனந்தத்தைத் தருகிறது.

## கோவிலூர் சுகாதார மையம்

காசிப் பணிகள் ஒருபுறம் நடந்து கொண்டிருக்க கோவிலூரிலும்

விரிவாக்கப் பணி நடைபெற்று வருகின்றன. சென்ற பிப்ரவரி மாதம்26 ஆம் தேதி அன்று கோவிலூர் சுகாதார பயிற்சி மையம் துவக்கத்திற்கான பூஜைகள் பழனி சாது சாமிகள் முன்னிலையில் சிறப்பாக நடைபெற்றன. இந்தக் கல்வி மையத்தின் வழியாக பொதுப்பணி உதவியாளர், முதியோர் பராமரிப்பு உதவியாளர், இல்ல சுகாதாரத் துணைஞர் ஆகிய நிலைகளுக்கான சான்றிதழ் படிப்புகள் பயிற்சி உடனடியாக துவக்கப்பட உள்ளன. கோவிலூரைச் சார்ந்த மக்களுக்கும் இங்கு சுற்றி உள்ள மக்களுக்கும் நல்ல வேலை வாய்ப்பை உருவாக்குவதற்கான நல்ல கல்வித் திட்டமாக இது அமைந்துள்ளது. மேலும் இந்தப் பணிகளுக்குத் தற்போது அதிகப்படியாக தேவை இருக்கிறது ஆனால் அதற்கு போதுமான அளவு பயிற்சி பெற்ற துணை செவி லியர்கள் கிடைப்பதில்லை. இந்தக் கல்வி மையம் பொதுமக்களுக்கு பெரிய அளவில் நன்மை புரியும். பெரிய வேலை வாய்ப்புகளை வழங்கும் என்பதில் எந்த ஐயமும் இல்லை.

மக்கள் பணியே மகேசன் பணியென மருத்துவப் பணிகளால் கோவிலூர் சிறந்த மருத்துவ மையமாக விளங்க உள்ளது.

## கனவகத்துடன் ஒத்துழைப்பு

அமெரிக்காவில் வாழும் காரைக்குடியைச் சேர்ந்த, அரிய பெரிய அறங்களை செய்துவரும் டாக்டர் வெங்கடாசலம் அவர்கள் மற்றும் அவர்களோடு இணைந்து செயல்படுகின்ற திரு பாலாஜி அவர்கள் ஆகியோர் ஒரு அறநிலையை ஏற்படுத்தி ”கனவகம்” என்ற பெண்கள் காப்பகத்தை பல ஆண்டுகளாக குன்றக்குடிக்கு அருகில் மிகச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். தற்போது கனவகம் அமைந்துள்ள குன்றக்குடியில் இருந்து அவர்கள் இடம் மாற வேண்டிய தேவை இப்போது ஏற்பட்டு இருக்கிறது. இதே நேரத்தில் கனவகத்தை மேலும் விரிவுபடுத்த விரும்புகிறார்கள். அதற்கு நம் கோவிலூர் மடாலத்தில் இருந்து இடம் கொடுக்கிறோம். புதிய கனவகத்தின் மூலமாக ஆதரவற்ற பெண்கள் பலர் நல்வாழ்வு பெறுவார்கள். அதற்கும் இறைகருணை துணை நிற்கும்.

கோவிலூர் மடத்தின் சமுதாயப் பணிகளுக்கு கனவகமும் ஒரு களம் அமைத்துக் கொடுத்துள்ளது.

## மேம்பட்ட கல்வியில் Hope-3 பவுண்டேஷன் உடன் ஒத்துழைப்பு

கல்விப் பணியில் சிறக்கவும், கோவிலூர் மடம் பெருமளவில் முயன்று வருகிறது. அமெரிக்காவில் வாழும், பொருளாதாரத்திலும் கல்வியிலும் மேம்பட்ட நிலையை அடைந்துள்ள நம் பகுதியை சேர்ந்த இளைஞர்கள் ஹோப் 3 பவுண்டேஷன் (Hope3 Foundation) என்ற ஒரு பொது தொண்டு நிறுவனத்தை ஏற்படுத்தி கல்விப் பணிகள் பல செய்து வருகின்றனர். இவ்வமைப்பின் மூலமாக அரசு பள்ளிகளில் படித்த பொருளாதார அளவில் பின்தங்கியுள்ள மாணவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களை நல்ல கல்லூரிகளில்




அசி காட்டில் உள்ள நம் மடத்தில் நாள்தோறும் செய்யப்படும் அன்னதானம்

சேர்த்து அவர்களுக்கு உணவு உறைவிடம் அளித்து அவர்களுக்கு திறன் கல்வியாக மென்பொருள் பயிற்சியும் அளிக்கின்றனர்.

மேற்படி நிறுவனத்தில் பங்கேற்றுள்ள காரைக்குடியை சேர்ந்த திரு பழனியப்பன் திரு நாராயணன் ஆகியோர் என்னை அணுகி இந்த செயல்பாட்டில் கோவிலூர் மடாலயம் தன்னை இணைத்துக் கொள்ள இயலுமா என்று கேட்டார்கள். நாமும் அதற்கு முழு ஒத்துழைப்பு தருவதாக வாக்களித்திருக்கிறோம் அடுத்த கல்வி ஆண்டிலிருந்து அவர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்ற மாணவர்கள் நம் கோவிலூர் மடாலயம் நடத்தி வருகின்ற கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் சேர்ந்து படிப்பதற்கும் மதிய வேளையில் அவர்களுக்கு கணினி பயிற்சி அளிப்பதற்கும் ஒப்புதல் அளித்திருக்கிறோம் இதை தவிர அரசு பள்ளியில் படித்து பத்தாம் வகுப்பு முடித்த மாணவர்களுக்கு நம் பாலிடெக்னிக்கிலும் அவர்கள் மூலமாக மாணவர்களை சேர்த்து அந்த மாணவர்களுக்கும் மதிய வேளையிலே சிறப்பான கணினி பயிற்சி அளிப்பதற்கும் தீர்மானித்து இருக்கிறோம். இந்த முயற்சி பொருளாதாரத்தில் பின்தங்கிய மாணவர்கள் மிகச் சிறந்த வேலை கிடைப்பதற்கான ஒரு அடித்தளமாக அமையும். அவர்களே சொந்த தொழில் செய்வதற்கும் வாய்ப்பாக இருக்கும்

இவ்வாறு காசி முதல் கோவிலூர் வரை சமுதாய, அற, கல்வி, மருத்துவப் பணிகளைச் செய்ய இறையருள் கூட்டி வைத்துள்ளது. அறம் செய்ய விரும்பு என்ற ஔவை மொழி நாளும் வளரும் மொழியாக இருக்கின்றது. நாளும் நாளும் அறத்தின் வெற்றியைச் சொல்லும் மொழியாக அமைகின்றது. அறங்கள் வாழ்க அறங்கள் வெல்க. அறத்தால் உலகம் செழிக்கட்டும்.

## கோவிலூரின் கதை - 3

## சீர் வளர் சீர் சிதம்பரம் சுவாமிகள் எனப்படும் கருணாநிதி சுவாமிகள் வரலாறு

# முன்னோர் வழியில் முக்தி நெறி




சீர் வளர் சீர்
சிதம்பர ஞான தேசிகர் சுவாமிகள்
(மூன்றாவது பட்டம்) (1849 – 1865)



- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

கோவிலூர் வேதாந்த மடத்தின் வேத தத்துவத் தடத்தில் மூன்றாம் பட்டமாகப் பொறுப்பேற்றுச் சிறந்த ஆக்கப் பணிகளைச் செய்து நிறைந்தவர் சிதம்பர சுவாமிகள் எனப்படும்

கருணாநிதி சுவாமிகள் ஆவார். இவர் கோவிலூர் ஆதீன முதல்வர் சீர்வளர் சீர் முத்திராமலிங்க ஆண்டவரின் அருட்பார்வைக்கு ஆட்பட்டு துறவு நெறிக்கு வந்தவர். ஆண்டவரின் நிறைவுக்குப் பின் பட்டமேற்ற பெரிய துறவு எனப்படும் சீர் வளர் சீர் அருணாசல ஞான தேசிகரின் தம்பியாவார். அண்ணன் காட்டிய நெறியில் முக்தி வழிக்கு வந்தவர் சிதம்பர சுவாமிகள். இவ்வதிசயம் வேறு எங்கும் எம்மடத்திலும் அமையாத பெருமையாகும்.

தேவகோட்டை வினைதீர்த்தான், முத்தாத்தாள் இணையர் பெற்ற இளைய பிள்ளை சிதம்பரம். இவர் அண்ணனை அடிக்கடி பார்க்க வந்த நிலையில் கோவிலூருக்கு வந்தார். அண்ணனின் குருவை வந்தபோதெல்லாம் தரிசித்தவர் அக்குருவையே தன் குருவாக ஏற்றிப் போற்றினார். கோவிலூருக்குப் போன கன்று கூட இல்லம் திரும்பாது என்ற தொடருக்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர் சிதம்பரம். ஆண்டவரின் அனுகிரகத்தால் பன்னிரண்டு ஆண்டு வேதாந்த நூல்களைக் கற்கும் வாய்ப்பு இவருக்குக் கிட்டியது. கோவிலூரிலேயே தங்கிவிட்ட சிதம்பரம் சுவாமிகள் ஆண்டவருக்கு உறுதுணையாக இருந்தார்.

## சீடாசாரத்தால் சீடர் ஆதல்

இவ்வாறு சிலகாலம் கழிந்த பின்பு மதுரையைச் சார்ந்த குட்டையா அய்யாவிற்கு உறுதுணை புரிய இவர் திருப்பெருந்துறைக்குச் சென்றார். அங்குள்ள வடக்குமடத்தில் இவர் தெய்வத் திருப்பணிகளைச் செய்துவந்தார். இவ்வாறு இவர் ஆண்டவரை மனதில் நினைந்துத் திருப்பெருந்துறையில் தெய்வப் பணியாற்றுவதை அறிந்த இவரின் முன்னவர் சீர்வளர் சீர் அருணாசல ஞான தேசிகர் இவரை ஆண்டவரின் அன்பிற்கு மேலும் பாத்திரர் ஆகும்படி ஆக்க விரும்பினார். பல நூல்களிலும் உள்ள குரு குறித்த வாசகங்களைத் தேடிப் பிடித்து ஒரு தொகுப்பாக்கி, சீடாச்சாரம் என்று பெயரிட்டு அதனுடன் ஆண்டவருடன் பணி செய்ய வருக என்று ஒரு கடிதமும் எழுதி வைத்து திருப்பெருந்துறையில் உள்ள சிதம்பரத்திடம் ஒப்படைக்கச் செய்தார்.

இதனைக் கண்டு கண்ணீர் பெருகி மனம் ஆற்றாது உடன் கோவிலூருக்குச் சிதம்பரம் எழுந்தருளினார். ஆண்டவரின் அருகே இருந்து அனைத்து பொறுப்பகளையும் கவனித்துக்கொண்டார். ஆண்டவரின் நிறைநாள் வரை அவருடன் நின்று இருந்து பணி செய்தார். அவரின் நிறைவிற்குப் பின்பு சீர்வளர் சீர் அருணாசல சுவாமிகளுக்குத் துணையாகி நின்று மடாலயத்தைக் கவனித்தார். முன்னவரின் நிறைவிற்குப் பின்பு சிதம்பரம் சுவாமிகள் கி.பி. 1849 ஆம் ஆண்டு அதாவது அவரின் முப்பத்தேழாம் வயதில் கருணாநிதி சுவாமிகள் என்ற திருநாமம் பெற்றுக் கோவிலூர் ஆதீனத்தின் மடப் பொறுப்பினை ஏற்றார். இவருக்கு நேமத்தான்பட்டி பழநியப்ப சுவாமிகளும், கோட்டையூர் அண்ணாமலை சுவாமிகளும் துணைநின்றனர்.

கோவிலூர் மடாலயத்தில் ஆண்டவருக்குத் தனிச்சன்னதி அமைத்து அவருக்கான அருட்கோயில் மகாலிங்க மூர்த்தமாக நிர்மானிக்கப்பெற்றது. அருணாசல சுவாமிகளின் நிறைவிற்குப் பின்பு ஆண்டவரின் சன்னதிக்கு எதிரில் நந்தியாக அமைத்து அதில் அவரை நித்தியமாக இருக்க கருணாநிதி சுவாமிகள் வழி செய்தார். இவ்விரு சன்னதிகளுக்கும் குடமுழுக்கினைச் சிறப்புடன் கருணாநிதி சுவாமிகள்

செய்தார்.

கோவிலூர் அருள்தரு திருநெல்லை உடனாய கொற்றவாளீசர் திருக்கோயிலைப் புதுப்பித்து அதற்குக் குடமுழுக்கினை நடத்தினார் கருணாநிதி சுவாமிகள்.இதுபோது நித்தியகல்யாணி, கைலாச நாதர்க்குப் புதிய ஆலயம் ஒன்றையும், சோமாஸ்கந்தருக்கு ஒரு சபையையும், கோவிலூர் திருக்குளத்தையும், அதன் நடுவே உள்ள நீராழி மண்டபமத்தையும் என்றும் பெருமை கொள்ளும் அளவிற்கு உருவாக்கிய பெருமை

## பொன்னம்பலப் பயணமும், பொன்னம்பல சுவாமிகளுக்கு அருளாசியும்

அவ்வப்போது தில்லைப் பயணம் மேற்கொள்ளவது கருணாநிதி சுவாமிகளின் வழக்கம். அவ்வாறு ஒருமுறை தில்லை சென்றபோது, கோட்டையூர் பெத்தாச்சி என்பவர் பொன்னம்பலம் என்ற நல் இளைஞரைக் கருணாநிதி சுவாமிகளிடம் ஆசி பெற அழைத்துவந்தார். தேவகோட்டைக்கு அருகில் உள்ள மங்கலக் குடியைச் சொந்த ஊராகக் கொண்ட அந்த இளைஞர் இளமையிலேயே பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு சிதம்பரம் கோயில் பணிகளை ஆர்வமுடன் செய்து வந்தார் . அவ்விளைஞரின் பூரவ பலன் அவர் கோவிலூர் கருணாநிதி சுவாமிகளிடம் பாடம் கேட்கும் நல்வாய்ப்பு அமைந்தது. அதனை அந்த இளைஞர் நன்றாகப் பயன்படுத்திக் கொண்டு வேதாந்தத் தெளிவினைப்பெற்றார். இவரே பொன்னம்பல சுவாமிகள் ஆவார். இவரின் மடம் தற்போது தில்லையில் உள்ளது.

இதனிடையே சிதம்பரம் கோயிலுக்குக் குடமுழுக்கு நிகழ்த்தப்பட வேண்டும் என்ற எண்ணம் கருணாநிதி சுவாமிகளுக்கு இருந்தது. அதற்காக தேவ கோட்டை இலக்குமணச் செட்டியாரை அழைத்துக் கருணாநிதி சுவாமிகள் ஆகவேண்டிய ஏற்பாடுகளைச் செய்யச் சொன்னார். இக்குடமுழுக்கும் கால யுக்தி வருஷம் ஆனிமாதம் 14 ஆம் நாள் நடத்தப்பெற்றது. சிதம்பரம் கோயிலுக்கும் நகரத்தார்களுக்கும் இடையே ஆன தொடர்பு இக்குடமுழுக்கின் வாயிலாக நெருக்கம்பெற்றது.

## நெல்லையம்மனுக்கு நெல் வயல்கள்

நெல் விளைச்சலைப் பாதுகாத்தவள் நெல்லைஅம்மன். அவளின் அருள் கருணை பெருக, பல கிராமங்களைக் கோவிலூர் மடாயலத்திற்குச் சொந்தமாக்கி மடாலயத்தின் எல்லையை விரிவாக்கியவர் கருணாநிதி சுவாமிகள். இக்கிராம விளைச்சல்கள் வழியாக சுவாமிகள் நித்திய அன்னதானத்தை மடத்தில் அமைத்தார். மேலும் அவர் பிராமண போசனத்தையும் நாளும் நடக்க வைத்தார்.

## புலமையும்,மொழி பெயர்ப்பும்

கருணாநிதி சுவாமிகள் தமது குரு பரம்பரையைப் பாராட்டி பல சிற்றிலக்கியங்களைப் படைத்தார். அவற்றைத் தொகுத்து குரு ஸ்துதி குசுமாஞ்சலி என்ற நூல் உருவாக்கப்பட்டது.மேலும்இவர் லட்சணா விருத்தி என்ற நூலை வடமொழியில் இருந்துத் தமிழாக்கம் செய்தார். இந்நூல் கோவிலூர் வேதாந்தக் கல்வித்திட்டத்தில் அமைக்கப்பெற்றுள்ளது.

## நிறைவு

சீர் வளர் சீர் கருணாநிதி சுவாமிகள் தன் நிறைநாள் அறிந்து கோவிலூர் மடத்திற்குத் தமது சீடரான காரைக்குடி இராமசாமி ஞான தேசிகரை நியமித்து கி.பி. 1865 ஆம் ஆண்டு இறை நீழல் அடைந்தார்.

# பத்திமை கால ஆடற்கலை



**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

## ஆடலமைப்பு

நடம், ஆடல், கூத்து, சொக்கம், நிருத்தம், நாடகம் எனப் பல்வகையாகச் சுட்டப்படும் இறைவனின் ஆடல், ஓரிடத்தில் மட்டும் புயங்கராக மாநடமாகக் குறிக்கப்படுகிறது. அதைப் பாம்புடன் தொடர்புடைய ஆடலாகக் கொள்கின்றனர் உரையாசிரியர்கள். சகளாதிகாரம் இவ்வாடலைப் பற்றி விரிவாகப் பேசுகிறது. இந்த புயங்கராக மாநடத்தைப் பொ. கா. 6ஆம் நூற்றாண்டின் கடைப்பகுதியில் தமிழ்நாட்டை ஆண்ட முதலாம் மகேந்திரவர்மரின் ஏழு குடைவரைகளுள் ஒன்றான சீயமங்கலம் அவனிபாஜன பல்லவேசுவரகிருகத்துத் தூண் சதுர மொன்றில் பல்லவச் சிற்பி சகளாதிகார விளக்கத்தை அடியொற்றிச் சிற்பமாக்கியிருக்கிறார்.

'நிருத்தம் பழம்படி ஆடும்' எனும் அப்பரின் சுட்டல் அவர் காலத்திலேயே நிருத்தம் பழைய மரபுகளும் புதிய வளர்நிலைகளுமாய்ச் செழித்திருந்தமையை உணர்த்தும். ஆடல்நெறி நின்றான், பாடல்நெறி நின்றான், வரன்முறையால் ஆடினை, பாடல்ஆடல் இலயம் சிதையாத கொள்கையான், நடம் சதிவழி வருவதோர் சதிரே எனும் தேவாரத் தொடர்கள் ஆடல், இசைக் கலைநூல்கள் வரையறுத்த வகைமைகளைப் பின்பற்றியே இலக்கண நெகிழ்ச்சி இல்லாது இறையாடல் நிகழ்ந்தமை சுட்டும். சொக்கம், நிருத்தம் போலவே நாடகமும் தலைமையான ஆடல் வடிவங்களுள் ஒன்றாய் விளங்கியமையைத் திருமுறை ஆசிரியர்கள் பல இடங்களில் பதிவுசெய்துள்ளனர். இறைவன் நாடகம் இனிதாடியதாகவும் நாடகமாக ஆடியதாகவும் குறிப்பவர்கள் அவரை நாடகமாடி என்றே அழைத்துள்ளனர்.

சிவபெருமான் ஆடியதாகக் கலித்தொகை குறிக்கும் பாண்டரங்கம் கூத்தைத் திருமுறை ஆசிரியர்களும் சுட்டுவதுடன், அக்கூத்தை ஆடியதாலேயே பண்டரங்கன் என்றும் பண்டரங்க வேடம் பயின்றவன் என்றும் இறைவனை அழைக்கின்றனர். யானைஉரி போர்த்து பாகம் உமையோடு படிதம் பல பாட, இறைவன் ஆடியதாகக் கூறுவதன் வழி சிவபெருமானோடு இணைத்துப் பேசப்படும் எட்டு வீரச்செயல்களில் சிலவேனும் நிகழ்வின்போதோ அல்லது நிகழ்வின் முடிவிலோ இறையாடலையும்

கொண்டமைந்தமை உணரப்படும். 'தெத்தென, தென்னென' என்று இசை முரல, ஒத்தற மிதித்து இறைவன் ஆடியதாகக் குறிப்பிடும் பதிகங்கள் அவரை ஓரிடத்தில் மட்டும் குரவை கோத்தவராகவும் கொம்மலிட்டு (கும்மி) ஆடியவராகவும் காட்டுகின்றன.

இறைவன் ஆடலில் நேர்ந்த அசைவுகளைக் குறிக்கும் சம்பந்தர், இரவில் ஆடும்போது அவர் தோள் பெயர்த்து ஆடியதாகவும் கனலேந்திக் கைவீசி ஆடியதாகவும் அதனாலேயே அவரைக் கைஆடலினார் என அழைப்பதாகவும் பாடியுள்ளார். முதுகாட்டிடை இறைவன் கால் குஞ் சித்து ஆடியதாகச் சொல்லும் சம்பந்தரது அடியொற்றியே, ஆடவல்லானின் வீசிய காலின் திருவடியைக் குஞ்சித்தபாதமாகக் குறிப்பர். ஆனால், கால் குஞ்சித்தல் என்ற சுட்டல், ஒரு காலை மடித்து ஊன்றி, மறு காலை மடக்கித் திருப்பிய இருத்தல் நிலையில் அமையும் குஞ்சிதக் கரணத்திற்கே பெரிதும் பொருந்துவதும் அக்கோலத்தில் சிவபெருமானின் ஆடல்வடிவங்கள் இராஜசிம்மப் பல்லவர் காலக் கோயில்களில் எழிலுறத் திகழ்வதும் இங்கு எண்ணத்தக்கன.

அப்பர் பெருமானோ, இறைவன் தோள்கள் மட்டித்தாட, கழலாடு திருவிரலால் கரணம் செய்து மாநடம் தொடங்கியதாகக் குறிப்பார். திண்தோள்கள் ஆயிரமும் வீசி நின்று திசை சேர நடமாடி அவனி தலம் பெயர நின்ற நிறைவுடையாராகவும் இறைவனைக் காட்டும் அப்பர், அவர் மணிதிகழும் அம்பலத்தே மன்னிக் கூத்தாடியதாகவும் பிச்சாடல் நிகழ்த்தியதாகவும் பாதம் நோவ இட்டெடுத்து சதுரநடம் காட்டுவதாகவும் பாடுகிறார். 'சிற்றம்பலத்துக் கூத்தனில் கூத்துவல்லார் உளரோ' என்று அறைகூவல் விடுக்கும் அப்பர், இறைவனின் பெருமையை, 'பூத கணம் ஆட ஆடும் சொக்கர், எண்டோள் வீசி அருந்திறல் மாநடம் ஆடும் எம்மான்' எனப் பதிவுசெய்வதுடன், கொட்டும் முழவுகள் கொட்டி நின்று இலயங்கள் ஆடிக் களித்துப் பின் இறைவன் படுதம் பெயர்ந்தாடியதாகவும் சுட்டுவார். இப்படுதக் கூத்தை சம்பந்தரும் குறிக்கிறார்.

காலதிர் கழல்கள் ஆர்ப்பக் கனல் எரி கையில் வீசி, ஞாலம் குழிய நின்று, மேலவர் முகடுதோய, விரிசடை திசைகள் பாய, ஆயிரம் தோளும் மட்டித்தாடி, ஆயிரம் அடியும் வைத்து இறைவன் ஆடிய ஆடலைச் செய்தற்கரிய திருநட்டமாகக் குறிக்கும் அப்பர், மீன்தோயுந் திசைநிறைய ஓங்கியாடும் பெருமானாகவும் அம்பலத்தின் நடுவே அதிர்பட ஆடவல்ல ஐயனாகவும் இறைவனைக் காட்டி, அத்தகு அரிய திருநடம் செய்த அவரது கால்களை, ஆடிய பொழுதொடு சேர்த்து அந்தி நாடகக் கால் என்று சிறப்பிப்பார். 'சிற்றம்பலத்து நட்டம் ஆட எடுத்திட்ட பாதமன்றோ நம்மை ஆட்கொண்டதே' என்று அப்பர் சுட்டும் காலசைவை, அண்டம்உற வீசிய காலாகக் காண்பார் காரைக்கால் அம்மையார்.

அப்பர் சுட்டும் எடுத்தபாதம் 108 கரணங்களுள் சில காட்டவும் அம்மை சுட்டும் வீசிய கால் கூடுதல் கரணங்கள் விளக்கவும் பயன்பட்டதாகக் கொள்ளலாம். தமிழ்நாட்டுக் கோயில்களில் இறைவனின் எடுத்தபாதக் கோலச் சிற்பங்களும் வீசிய கால் கொண்ட சிற்பங்களும் அவரது ஆடல் திறம் காட்டப் பதிவாகியுள்ளன.

அப்பரின் தொடரைத் தொட்டு மதுரை சுந்தரேசுவரர் கோயிலில்

அதிர ஆடுவார் என்ற பெயரிலேயே இறைவனின் ஆடற்திருமேனி எழுந்தருளுவிக்கப்பட்டதாகக் கல்வெட்டுக் கூறுகிறது.

சம்பந்தரின் இரண்டு பதிகங்களில் ஆடல்வகைகளுள் ஒன்றாகக் குனித்தல் குறிக்கப்பட்டுள்ளது. பேரகராதி குனித்தலைக் கூத்தின் விகர்ப்பம் என்கிறது. குனித்த என்ற சொல்லுக்கு வளைந்த எனும் பொருள் தரப்படுவதால், குனித்தல் கூத்தை வளைந்தாடப்பட்ட கூத்தாகக் கொள்ளலாம். காட்டகத்தே குள்ளப்பூதங்கள் குழல் இசைக்கக் கழலும் சிலம்பும் ஒலிக்க, இறைவன் குனித்தார். பூதங்கள் அவ்வாடல் கண்டு களித்துப் போற்றிக் கற்றும் கொண்டன. அதனால்தான், முல்லைநிலக் கடவுளாகிய திருமால் இறைவன் ஏறும் காளையாகி வந்த நிலையில், பூதம் ஒன்று அவர் எதிரில் கல்லவடம் எனும் பறை ஒலிக்கக் குனித்தாட முடிந்தது. இக்கல்லவடம் சங்க இலக்கியங் களிலோ, சிலப்பதிகாரத்திலோ இடம்பெறாத தோலிசைக் கருவியாகும். இதைக் கல்லாடம், மும்முகக் கயலுடன் மயிர்க் கயிறு விசித்த கல்லவடமாகக் காட்டும்.

பாடியும் பாடலுக்கேற்பக் கருவிகளை இயக்கியும் அந்த இசையொலிக்கு ஆடியும் மகிழ்ந்த இறைவனை ஞானக்கூத்தனாய்க் காணும் அப்பர், இறைவன் ஆடும் கூத்து அரங்கிடை நூலறிவாளரால் அறியப்படாத கூத்து என்கிறார். அப்படியோர் ஆடல்கோலத்திலும் சோழர் காலத்துச் செப்புத்திருமேனிகள் இரண்டு (நல்லூர், களக்காடு) உருவாகியுள்ளமை குறிப்பிடத்தக்கது. இவை கரண விளக்கங்களுக்குள்ளோ, தாண்டவப் புரிதல்களுக்குள்ளோ வராத வார்ப்புருவங்கள்.

### மங்கையர் ஆடல்

சங்க இலக்கியங்களும் காப்பியங்களும் காட்டும் மக்கள் ஆடலைப் பத்திமை இலக்கியங்களும் விடாது போற்றுகின்றன. சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரையின் கடை வீதிகளில் பூவண்ண மேனியெழில் கொண்ட இளநங்கையர் பொன்னும் மணியும் கொழித்தெடுத்து ஆடினராம். முழவம் அதிர, மடப்பம் நிறைந்த மங்கையர் ஆடிய இடமாய் அன்பிலாந்துறை காட்டப்படுகிறது. குடந்தைக் காரோணத்தில் தேனார் மொழியார் திளைத்தாடித் திகழ்ந்தனராம். முதுகுன்றத்திலோ எங்கும் விழாக் கம்பலை. அத்துடன், ஆங்காங்கே ஆடற்பள்ளிகளில் மகளிர் முழவின் இசையோடு பாடியாடும் ஒலிகளும் நிறைந்துள்ளன. பாம்புரத்திலோ வேறோர் படப்பிடிப்பு. அங்கே ஆசிரியர்களாய் மயில்கள். பயில்வோரோ பெண்கள். ‘மஞ்சுதோய் சோலை மாமயிலாட மாடமாளிகைதன் மேல் ஏறிப் பஞ்சுசேர் மெல்லடிப் பாவையர் பயிலும்’.

ஐயாறு ஆடல் நிலைக்களனாய் இருந்ததாகக் குறிப்பிடும் சம்பந்தர் பல காட்சிகளைக் கண்முன் நிறுத்துகிறார். அவ்வூர்க் கோயிலை வலம் வரும் பெண்கள் ஆடி மகிழ்கின்றனர். கோ யிலை வலம் வருதல் சமுதாயப் பழக்கமாக ஒன்றிய நிலையைக் கலித்தொகை யிலேயே பார்க்க முடிந்தாலும் அது ஆடல் வலமாய் அமைந்த பாங்கைப் பத்திமைக் காலத்திலேயே சந்திக்க முடிகிறது. ஆடற்கலை கோயில்களுக்குள்

அடைக்கலமாவதைச் சம்பந்தரின் பதிகஅடிகள் முன்னோட்டமாய்க் காட்டுகின்றன எனலாம். இதை வலியுறுத்துவது போல் நாகைக் காரோணம் பற்றிய பதிகத்தில், ‘தேன்மொழியார் வந்து வலஞ் செய்து மாநடமாட’ எனும் குறிப்பைக் காணமுடிகிறது.

ஐயாற்றின் அகலமான தெருக்களில் ஆங்காங்கே ஆடல் அரங்குகள். அவற்றில் சேயிழையார் ஆடல் பயில்கின்றனர். அவர்தம் ஆடலுக்குக் காந்தாரப் பண்ணில் இசையமைத்துக் காரிகையர் பாடுகின்றனர். ஆடும் பெண்களோ தாளம் தவறாது, ‘தேந்தாம்’ எனப் பாதம் பதித்து அடவு காத்து, ஆடல் நிகழ்த்துகின்றனர். அதே ஊரின் மற்றொரு பகுதியில் ஆடலாசிரியர் நட்டுவக்கோலால் தட்ட, வளையணிந்த நங்கையர் கூத்திடுகின்றனர். அவர்தம் விழிகள் நாற்புறமும் சுழன்று ஆடலுக்கேற்ற பார்வைக் குறிப்புகளைப் பக்குவமாய்த் தருகின்றன.

ஒரே பதிகத்தில் பண், பாடல், ஆடல், பயிலுமிடம், ஆடுமிடம், அரங்குகள், நட்டுவக்கோல் என எத்தனை ஆடற்கலை சார்ந்த செய்திகள். ஐயாறு ஆடல் வளர்த்த ஊர் போலும். அதனால்தானோ என்னவோ, அப்பரும் ‘ஆடல் அமர்ந்து உறைகின்ற ஐயாறு’ என்று மகிழ்ந்துரைத்தார். பின்னாளைய சோழர் கல்வெட்டுகளும் ஐயாற்றிலிருந்து ஆடல் வளர்த்த தலைக்கோலிகளைப் பற்றி விதந்து பேசுகின்றன. இது போல் பழுவூர், தேவூர், புனல்வாயில், சீர்காழி, திருக்களர், கடம்பூர், கோட்டூர், ஆரூர், சிற்றேமம், திருவதிகை உள்ளிட்ட பல ஊர்ப் பதிகங்களில் மகளிர் ஆடல் பயின்றமையும் பல்வேறு இசைக் கருவிகளுக்கு ஆடல் நிகழ்த்தியமையும் பாடப்பட்டுள்ளமை நோக்க, பத்திமைக் காலத்தில் கோயில்கள் விளங்கிய பெரும்பாலான ஊர்களில் ஆடலும் இசையும் கருத்தாய் வளர்க்கப்பட்டமை அறியலாம்.

## முடிவுரை

இறைவன், கோயில் என ஆடலின் நோக்கமே மாறத் தொடங்குவதைப் பத்திமைக் காலத் தரவுகள் தெளிவு செய்கின்றன. முந்து காலங்களில் காணாத அளவிற்கு இறைப்பார்வையில் ஆடல் வளர்க்கப்படுவதையும் இறை சார்ந்தே ஆடலின் அனைத்துப் பரிமாணங்களும் பார்க்கப்படுவதையும் அப்பர், சம்பந்தர் பதிகங்கள் புலப்படுத்துகின்றன. குரவை, கழையாடல் என சங்க வேர்கள் அங்காங்கே தலை நீட்டினாலும், சொக்கம், குடக்கூத்து எனக் காப்பியக் காட்சிகள் சில கண் காட்டினாலும் ஆடலின் புதிய வகைகள் பத்திமைக் காலத்தே தலையெடுத்துவிட்டமை குணலை, கொம்மல், படுதம், குனித்தல், நிருத்தம், புயங்கராக மாநடம் எனும் இறையாட்டங்களால் புலப்படும்.

சங்கமும் காப்பியமும் காணாத பல இசைக்கருவிகள் பத்திமைக் காலத்தே ஆடலுக்கு இசைகூட்டின. அவற்றுள், குடமுழவும் உடுக்கையும் ஆடல் நிகழ்வுகளின் தலைமைக் கருவிகளாகப் பல நூற்றாண்டுகள் தொடர்ந்தமையைச் சிற்பக்காட்சிகள் உணர்த்துகின்றன. கொடுகொட்டி போன்ற சில அரிய கருவிகள் இக்காலத்தே தலைநீட்டி எளிதில் மறைய, கல்லவடம் போன்றவை சில காலம் தொடர்ந்துள்ளன. இறைவன் உகந்தேந்திய நரம்பிசைக் கருவியாகப் பதிக ஆசிரியர்களால் முதன்மைப்படுத்தப்படும் வீணை, அப்பெருமானின் கையில் இசைபயக்கும் காட்சியைப் பல்லவர்களும்

சோழர்களும் விரும்பிக் கொண்டனர். பல்வகைத் தாளங்கள் பத்திமைக் காலத்தே இயங்கின. இசை, ஆடல் சார்ந்த பல கலைச்சொற்கள் உருவானமையை 'பாணி, இலயம், சதி, சுருதி, சதிர்' கொண்டு அறியலாம்.

சங்கப் பேய்களும் காப்பியப் பூதங்களும் இறைவன் படைகளாக, சிவபெருமான் உமை இணையின் பெருமை மலையளவு உயர்கிறது. ஆடலின் நாயகராகக் காட்டப்படும் சிவபெருமான், சொக்கத்தே நிருத்தத்தே தொடர்ந்த மங்கையாம் காளியைக் கதமடக்கிக் குளிர்வித்தாலும் பெண்மையின் பெருமை புலப்படுத்த உமையைப் பாகமாக்கி ஆடுவதன் வழி, ஆடலில் பெண்களின் பங்கை உறுதிப்படுத்துகிறார். பத்திமைக் காலத்தே வழக்கிலிருந்த இசை, ஆடல்நூல்கள், காமரம்பஞ்சுரம்காந்தாரம் முதலிய பண்கள், ஆடலில் கைகளினும் கால்கள் பெற்றிருந்த முதன்மை (அந்தி நாடகக் கால், எடுத்தபாதம், அண்டமுற வீசிய கால்) என்பன பத்திமைக்கால வரவுகள்.

ஆடற்கலை இறைவழிபாட்டுடன் ஒன்றத் தொடங்கிவிட்டதைக் கோயிலை வலஞ் செய்து ஆடிய பெண்கள் வெளிப்படுத்த, தமிழ்நாட்டின் பெரும்பாலான ஊர்களில் ஆடற்கலைப் பள்ளிகள் இருந்தமையும் ஆடற்கலைஞர்கள் மாட மாளிகைகளில் செல்வாக்குடன் வாழ்ந்தமையும் பல பாடலடிகளில் படம்பிடிக்கப்பட்டுள்ளன. கணிகை, கூத்தி எனும் சொற்களை யாண்டும் பெய்திராத பத்திமைக்காலப் பார்வை, ஆடற்கலை இறைப் பார்வையில் செழித்ததாலும் இறைவனோடு இறைவியும் இணைந்தாடிய சூழலாலும் அக்கலை தெய்வத நிலைக்கு உயர்ந்ததையும் அதனாலேயே அனைத்துப் பெண்களும் ஆடித்தொழுவதை அக்கறையோடு பயின்றதையும் பல பதிகங்களில் பதிவுசெய்துள்ளது. சுருங்கச் சொன்னால், இருண்ட காலத்தில்தான் தமிழ்நாட்டு ஆடற்கலை நோக்கும் போக்கும் மாறி, மிக விரைந்து வளர்ந்து சமூகத்தின் அனைத்துத் தள மக்களுக்குமான கலையாகி உச்சங்களைத் தொட்டு, தொடர்ந்த நூற்றாண்டுகளுக்குப் பாங்கான அடித்தளமிட்டுத் தந்ததெனலாம்.

(முற்றும்)

# திருமந்திரம்

புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
அடையப்பட் டார்களும் அன்பில ரானார்
கொடையில்லை கோளில்லை கொண்டாட்டமில்லை
நடையில்லை நாட்டில் இயங்குகின் றார்கட்கே.

பொழிப்புரை: உழையாது வைத்து நல்குரவு எய்துவோர் வாழ்க்கை, முற்றுங்கிழிந்து அற்றம் மறைத்தற்கும் ஆகாப் புடைவை போல் மதிப்புறாது போய்க்கழியும். கழியவே தம்மைச் சார்ந்த நண்பர் உறவினர் முதலாயினாரும் அன்பற்று விலகுவர். எவர்க்கும் ஏதும் கொடுத்தலும் உண்டாகாது. அதனால் அவர்கள்பால் ஏதும் கொள்ளுதற்கும் இடன் இன்று. சிறப்பாகக் கொண்ட உயிர் நட்பும் பறந்தொழிந்தது. ஆனேறுபோல் தான் நிமிர்ந்து நடக்கும் பீடுநடையில்லை. நாட்டில் என்புதோல் போர்த்த உடம்புபோல் இன்பின்றித் திரிகின்றார்கள்.

*****

பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருதென்று
அக்குழி தூர்க்கும் அரும்பண்டம் தேடுவீர்
எக்குழி தூர்த்தும் இறைவனை ஏத்துமின்
அக்குழி தூரும் அழுக்கற்ற போதே.

பொழிப்புரை: குழியாகிய வயிற்றினை நிரப்புதற் பொருட்டு மிக வருந்தி அக் குழி தூர்த்தற்கு வேண்டிய அரும் பொருள்களைத் தேடுவீர்! பசிக்குழி, நோய்க்குழி, வறுமைக்குழி, பிறவிக்குழியாகிய எக்குழி தூர்க்க வேண்டுமானாலும் எல்லாம் வல்ல இறைவனை முறையாகச் செந்தமிழ்ச் சொல்லால் ஏத்துங்கள். ஏத்தவே, அகத்துக்கண் உள்ள அழுக்காறு, அவா வெகுளி, இன்னாச்சொல் ஆகிய நான்கும் அழுக்கும் அப்பொழுதே அறும். அறவே, அவ்வயிற்றுக்குழி அந்நொடியே தூரும். தூர்ப்பான்

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

பகுதி-5

## உருக்காட்டு படலம்

[பாடல்கள் 117]



முனைவர் சரசுவதி இராமநாதன்,
பள்ளத்தூர்

இராவணன் சென்றதும் அனுமன் அரக்கியரை உறங்க வைக்க மந்திரம் கூறினான். உடனே அவர்கள் உறங்கிவிட்டனர். 'இராமனின் வில்லின் ஒலி இங்குக் கேட்க, வருவானா? 'நாராயணனே ! தனி நாயகனே! நீங்கள் இரக்கமில்லாதவரா? என்றெல்லாம் சீதை (என்ற ஜீவாத்மா, பரமாத்மாவின் கருணையை) வேண்டிப் புலம்புவதைப் பார்க்கிறோம்.

'கல்லா மதியே கதிர்வாள் நிலவே!

செல்லா இரவே! சிறுகா இருளே! (சுந்தர காண்டம் உருக்காட்டு படலம்.4)

என்னையே வருத்து கிறீர்களே! இராமனை வருத்த மாட்டீரோ!

(அத்திக்காய் காய் காய் ஆலம் காய் வெண்ணிலவே! இத்திக்காய் காயாதே! என்னைப் போல் பெண்ணல்லவோ!) என்ற கவியரசர் பாடல் நினைவில் நிழலாடுகிறதே!

ஸ்ரீராமனைப் பார்க்கலாம் என்ற ஆசையால் தானே உயிர்தாங்கி வாழ்கிறேன். அரக்கனின் சிறையில் இருந்த என்னை அப்புனிதன் தொடுவாரா? கணவனைப் பிரிந்து உயிர் வாழ்ந்த பெண்கள் என்னைப் போல் யாராவது இருந்திருக்கிறார்களா? எனக்கு ஏற்பட்ட பழியைத் துடைக்க நான் உயிர்விடுதலே நலம்.

"வஞ்சனைமானின் பின் மன்னைப் போக்கி என்

மஞ்சனை வைதுபின் வழிக் கொள்வாய் எனா

நஞ்சனை யான்அகம் புகுந்த நங்கை நான்

உய்ஞ்சனன் இருத்தலும் உலகம் கொள்ளுமோ?

ஒருவேளை இராமன் என்னை மீட்டாலும் – நீ,

"இற்புகத் தக்கலை என்னின், யானுடைக்

கற்பினை, எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்?"

என்றெல்லாம் கவலைப்பட்டு,



இறக்கத்துணிந்து, மாதவிப் பொதும்பரை அடைந்தாள். அனுமன் திடுக்கிட்டான். தீண்டக் கூசினான். அவளோ கற்புத் தெய்வம். கற்புக்கலை இவனோ மாணி. (மாதர் நலத்தை மனதாலும் எண்ணாத தூயவன்)

நைஷ்டிக பிரம்மச்சாரி என்பர் வடமொழியில் என்ன செய்தால் இந்தத் தாயின் உயிரைக் காக்க முடியும்! இராமர் பெயரே தாரக மந்திரம்! அதைச் கூறி "அண்டர் நாயகன் அருட் தூதன் நான்" என்றான் அறிஞனான அனுமன், இராம நாமம் உயிர்க் காத்தது. அது "ஜென்ம ரட்சக மந்திரம்" என்றார் சத்குரு தியாகராஜ சுவாமி.

### உருக்காட்டுஞ்ஞ்..?

இந்தப் படலத்தின் பெயர் உருக்காட்டு படலம். அனுமன் சீதைக்குத் தன் பேருருவைக் (விஸ்வரூபத்தை) காட்டிய படலம் என்பது பொருள். இராமனது அழகிய உருவினைத் தன் வார்த்தைகளால் 20 பாடல்களில் படம் பிடித்துக் காட்டிய படலம் என்பது எனது கருத்து.

நான் இராமதூதன் தாயே! ஐயுறுதல் ஏன் நீங்கள் இங்குச் சிறையிருக்குமிடம் தெரியாததால் தான் அரக்கர் குலம் (இராமனால் அழியாமல்) வாழ்ந்து கொண்டிருக்கிறது என்றான் அனுமன்.

அச்சம், ஐயம் இருந்தாலும் "இராம நாமம் சொல்பவன் அரக்கனாக இருக்கமாட்டான்! நேர்மை, தூய்மையுள்ளவன் போலும்!" எனத் தெளிந்த பிராட்டி,

அரக்கனேஆக! வேறோர்அமரனேஆக! அன்றிக்

குரக்கினத்துஒருவனேதான்ஆகுக! கொடுமைஆகுக.

இரக்கமேயாகவந் துஎம்பிரான்நாமம்சொல்லி

உருக்கினான்உணர்வை; தந்தான்உயிர்; இதின்உதவிஉண்டோ!

என இரங்கி, "யாவன் நீ!" என்றான் தாயே! உன்னைப் பிரிந்த பின் இராமன் உயிரற்ற யாக்கை போலத் திரிந்து இரலையங் குன்றிற்கு (ரிஸியமுக பர்வதத்திற்கு) வந்து எங்கள் தலைவன் சுக்ரீவன் நட்புக் கொண்டான். இராவணனை வாலில் கட்டிய வாலியைக் கொன்றான் கடல் போன்ற வானரப்படை உன்னைத் தேடி உலகெங்கும் சென்றன. அங்கதன் தலைமையில், "ஏவல் கூவல் பணி செய்யும் வானரன் நான் அனுமன் என் பெயர் என்றான்.

"எத்தனை பணிவு பேச்சில் எத்தனை கனிவு? வியந்தாள் சீதாதேவி. யாரோ நீ, அமரனோ அரக்கனோ குரங்கு தானோ! என்னுயிர் நாதன் ஸ்ரீராமநாதனின் நாமம் சொல்லி என் உயிர்க் காத்தவன் நீ ! என்று

நா தழுதழுக்க நன்றியுடன் பேசுகிறார் பிராட்டி.

*****

## அறிமுகம்

“தாயே உன்னைப் பிரிந்து தவித்து வந்த ஸ்ரீராமச்சந்திரமூர்த்திக்கு ஒரு நண்பனாக, சூரியப் புதல்வன், குரங்கினத்து எம் தலைவன் சுக்ரீவன் கிடைத்தான்”. உன்னை வஞ்சனையில் கவர்ந்து வந்த தசமுகனை வாலில் கட்டிய வாலி என்ற குரங்கினத்து அரசனின் தம்பி தான் சுக்ரீவன். வாலியை உன் தலைவர் ஓர் அம்பினால் கொன்றார். சுக்ரீவனுக்கு அரசு தந்தார். உன்னைத் தேட அனுப்பிய குரங்குகளில் நாயேன், வாயுபுத்திரன் அனுமன்’. உங்கள் அணிகலன்களை இராமபிரானிடம் காட்டினோம் தாயே! அப்போது ஸ்ரீராமன் அடைந்த உணர்ச்சியை வார்த்தைகளால் விவரிக்க முடியாது அன்னையே! நீ இழந்த அந்த நகைகள் இழக்கக் கூடாத மாங்கல்யத்தைக் காத்திருக்கின்றன என்று கூறி நெகிழ்ந்தான்.

## இராமன் அழியா அழகன்

சீதைக்கு நம்பிக்கை துளிர்விட்டது. இருந்தாலும் “ என் நாயகன் திருமேனி எப்படியிருக்கும்?” என்று சொல் அனுமனே – என்றாள். சுந்தரகாண்டத்தில் நிறைவுப்படலத்தில் தான் இராமன் வருகிறான். ஆனாலும் இராமன் எனும் சுந்தரனின் நினைவு வருகிறதே. சிவந்த இதழ்த் தாமரை போன்ற நாயகனின் திருவடி இளங்கதிர் ஒத்த நகங்கள் என்று பாதாதி கேசமாக வருணிக்கிறான் சொல்லின் செல்வனான அனுமன்! மனிதர்களை வருணிப்பதனால் கேசம் முதல் பாதம் வரை (முடி முதல் அடி வரை) விவரிப்பர். கடவுளைப் பாதாதி கேசமாக (அடியிலிருந்து தொடங்கி) வருணிப்பது மரபு. அருணாச்சலக் கவிராயர் அந்த ராம சௌந்தரியம் என்னால் அறிந்து சொல்லப் போமோ, என்ற பாடல் வழி இராமனின் வடிவழகு வார்த்தைகளில் அடங்குமா என்று பாடுகிறார். இராமனையே நேரில் பார்த்தத்து போல் மகிழ்ச்சியும் பிரிவுத் துயரமும் போட்டியிட உணர்ச்சிப் பெருக்கில் தத்தளித்தாள் சீதை! அனுமன் மீது நம்பிக்கையும், பாசமும், அருளும் மேலிடக் கண்ணீர் சொரிய நின்றார்.

## வேறுசில அடையாளங்கள்

தேவி! நான் இராமதூதன் தான்! புரிந்து கொண்டிருப்பீர்கள். அவர் சொல்லியனுப்பிய சில செய்திகளை நான் சொல்கிறேன். நான் கானகம் செல்வேன். நீ அயோத்தியில் இரு. நடக்க அரிதாகும் நெறி” (காட்டு வழி நடத்தல் சிரமம்) என்றாராம் ஸ்ரீராமர். கோபத்துடன் மரவுரியை அணிந்து கொண்டு, உயிர் வாடியது போல அருகில் வந்து நின்று புறப்படத் தயாராக இருந்தீராமே, அன்னையே!

அயோத்தியின் எல்லை தாண்டியதுமே யாண்டையது கான்! என்று மெதுவாகக் கேட்டீர்களாமே தாயே! சுமந்திரன் உங்களை விட்டு விட்டுப் புறப்பட்ட போது கிளி, நாகண வாய்ப்புள் இவற்றை என் தங்கைகளைப் (ஊர்மிளை, மாண்டவி, சுருதகீர்த்தி) பார்த்துக் கொள்ளச் சொல்லுங்கள்” எனக் குழந்தை போலக் கூறினீர்களாமே லோக மாதாவே!

(பறவைகளைப் பாதுகாக்கச் சொன்ன அன்னையை, சடாயு என்ற பறவை காத்தது எவ்வளவு பொருத்தம்!)

*(தொடரும்)*

# சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்



**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்
ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,
வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...
வலையொலியில் தமிழொலி

**சிந்தையில் சிவமும் வாக்கினில் தமிழும் வைத்த நாவுக்கரசர்!**

தமிழக வரலாற்றில், சைவம் தழைத்த காலம் என்றும் சைவ மறுமலர்ச்சிக் காலம் என்றும் பத்திமை காலத்தை ஆய்வாளர்கள் குறிப்பர். அவ்வாறெனில், சிவனை வழிபடும் வழக்கம் பத்திமை காலத்துக்கு முன்பே இருந்தது தெரிகிறது. தொல்காப்பியக் காலத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐவகை நிலங்களும் முருகன், திருமால், இந்திரன், வருணன், கொற்றவை என்ற நிலத்திற்குரிய கடவுள்களும் முறையே இருந்ததை அறிவோம். சங்க இலக்கியங்கள், தமிழ் மண்ணில் தொன்றுதொட்டு வணங்கப்பட்ட முதன்மைத் தெய்வங்களான கொற்றவையைப் பழையோள் என்றும் முருகனைப் பழையோள் குழவி என்றும், திருமால் மற்றும் பலராமனைச் சிறப்புற்ற தெய்வங்களாகவும் காட்டுகின்றன.

அகநானூறு 'முக்கண்செல்வன்' என்றும், சிறுபாணாற்றுப்படை 'ஆலமர்செல்வர்' என்றும், புறநானூறு 'ஆலமர்கடவுள்' என்றும் ஆலமர நிழலில் அமர்ந்து அருள்பாலிக்கும் தென்முகக் கடவுளைச் (தட்சிணாமூர்த்தி) சுட்டக் காணலாம். சங்க இறுதிகாலப் படைப்பாகக் கருதப்படும் கலித்தொகையில்தான் சிவபெருமான் ஆதிரையான், ஆனேற்றுக் கொடியோன், ஈர்ஞ்சடை அந்தணன், தாழ்சடைப் பெரியோன், நீலமேனி வாலிழைபாகத்து ஒருவன், மணிமிடற்றன் என்று பலவாறாகப் போற்றப்படுகிறார்.



கொற்றவை, கூகூர்

பிறவாயாக்கைப் பெரியோன் என்று சிலம்பிலும், நுதல்விழி நாட்டத்துப் பெரியோன் என்று மணிமேகலையிலும் சிவபெருமான் வணங்கப் பெற்றாலும், சங்ககாலம்தொட்டுக் காப்பியக்காலம்வரையில் சிவன் என்ற பெயரால் அவர் அழைக்கப்படவில்லை, என்று டாக்டர் மா. இராசமாணிக்கனார் தம் 'சைவசமயம்' நூலில் கூறுகிறார்.

'சைவம் சிவனுடன் சம்பந்தமாகுதல்' (5ஆம் தந்திரம்.15.1) என்று திருமூலரும், 'சிவகதி சேர்ந்தின்பம் எய்துவதைக்' (மூத்ததிருப்பதிகம் 11) காரைக்கால் அம்மையாரும், பத்திமை காலத் தொடக்க ஆண்டுகளில் நமக்கு அறிமுகப்படுத்துகிறார்கள். அவரைத் தொடர்ந்து திருநாவுக்கரசர், 'சிவனெனும் ஓசையல்லது அறையோ உலகில்' (4.008.01) என்று சைவத்தின் தலைமகனைப் பாடுவதோடு, திருச்செம்பொன்பள்ளியில் தந்தையும் தாயுமான ஞானமூர்த்தி சிந்தையுள் சிவம் அதுஆனார்(4.029.04) என்று உருகுகிறார். உமையால் ஞானப்பால் தந்தருளப் பெற்ற திருஞானசம்பந்தரோ, 'தாயானவன் உயிர்கட்குமுன் தலையானவன் மறைமுத்தீயானவன் சிவனெம்மிறை' (1.011.05) என்று உமையொருபாகனைப் பாடுகின்றார்.

காலனை உதைத்தும் காமனை எரித்ததுமான எட்டு வீரச்செயல்கள் புரிந்தவரும் ஐஞ்சபைகளில் ஆடவல்லாருமான சிவபெருமானின் பேராற்றலை, காப்பியக் காலத்துக்குப் பிந்தைய தமிழகம் வியந்து போற்றும்பொருட்டுத் தம் வாழ்வையே வரலாறாக அளித்தவர்கள் சிவனடியார்கள். 'அன்பிற்குமுண்டோ அடைக்கும்தாழ்' என்ற வள்ளுவர் குறளுக்கேற்ப எல்லையில்லா அன்பின் வெளிப்பாடே பத்திமை என்று உணர்த்திய உயர்வாழ்வு அவர்களுடையது. இசையால் தொண்டு செய்த நீலகண்ட யாழ்ப்பாணரும் (யாழ்) ஆனாயநாயனாரும் (குழல்); மனதால் கோயில் கட்டி வழிபட்ட பூசலாரும் வாயிலார் நாயனாரும்; காலம் கடந்து நிற்கும் இறைவனின் வழிபாட்டுத் தலங்கள் அமைத்த கோச்செங்கணானும் காரிநாயனாரும் காட்டியது அன்பில் ஒரு வகை. தம் கண்ணையே இடந்து இலிங்கத் திருமேனியில் அப்பிய கண்ணப்பரும், மகனை அறுத்து உணவு படைத்த சிறுதொண்டரும், உதிரத்தால் விளக்கெரித்த கலியநாயனாரும்,

தந்தையின் காலை வெட்டிய சண்டேசரும் காட்டியது எண்ணுதற்கப்பாற்பட்ட இறையன்பு. இறையன்புக்கென வாழ்ந்த அறுபத்துமூவரில் பதிகம் பாடியோர் எழுவரே.

சிவனைப் பாடிப் பரவிய நாயன்மார் பதிகங்களை ஆழமாகப் படித்தால் கிடைக்கும் புதையல்களுள் முதன்மையாகக் கொள்ளத்தக்கது இறைவன் விரும்பும் அன்புமொழி தமிழென்பது. இறைவன் அன்புக்கு மட்டுமே கட்டுப்பட்டவன், தன்மேல் மட்டற்ற அன்புகொண்டோரை என்றும் காப்பவன் என்பதை வலியுறுத்தப் பிறந்தது பத்திமை இயக்கம் எனில், தாய்மொழியாம் தமிழ்மொழியில் இறைவனைப் பாடுவதும் தமிழ்வழியே அவனருளை நாடுவதும், இறையருளாம் பேரின்பத்தை அடையும் வழிகள் என்பதே பத்திமை இலக்கியத்தின் சாரம்.

தேவார மூவருக்கும் முன்னர், பதிகமும் அந்தாதியும் இரட்டை மணிமாலையும் பாடிய காரைக்கால் அம்மை, ‘காரைக்கால் பேய் செப்பிய செந்தமிழ்ப் பத்தும் வல்லார் சிவகதி சேர்ந்தின்பம் எய்துவாரே’ (11.002.11) என்று பாடியது இதைத்தான். அருந்தமிழால் இறைவனைப் பாடிய அடியாருள்ளும், சலம் பூவொடு தூபம் இருப்பினும் ‘தமிழோடு இசைப்பாடல் மறந்தறியாத’ அப்பரை, ‘செந்தமிழின் சொல்வளப் பதிகத் தொடைபாடிய பான்மை யினால் நாவுக்கு அரசு’ (12.027.74) என்று தமிழை விரும்பிய சிவபெருமானே சிறப்புப் பெயரிட்டு வாழ்த்தினார். இக்கருத்தையே சேக்கிழாரும், ‘அன்பு பெருகிய சிறப்புமிகு அருச்சனை பாட்டேயாகும்’ என்று சுந்தரருக்கு அறிவுறுத்திய சிவபெருமான், ‘ஆதலான் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக’ (12.தடுத்தாட்கொண்டபுராணம்.216)




என்று கூறுமிடத்தில் உறுதி செய்கிறார்.

தேவார மூவர் குறித்துச் சொல்கையில், இறைவன் சம்பந்தரைப் பாலைக் காட்டியும் அப்பரைச் சூலை காட்டியும் சுந்தரரை ஓலை காட்டியும் ஆட்கொண்டருளினார் என்று நயம்படச் சொல்வார்கள். சம்பந்தரின் பசி போக்கியவர், சுந்தரருக்குப் புதிய வாழ்வளித்தவர், அப்பருக்குத் தந்ததோ சூலை நோயை. சிவனவன் சிந்தையில் நின்றதனால், அவனருளாலே நோய் தீர்ந்த பின்னும் தொடர்ந்த சோதனைகளை என்னவென்று சொல்ல?

சுண்ணாம்பு அறையிலிட்டும், நஞ்சு கலந்த உணவளித்தும், யானையால் இடரச் செய்தும், கல்லைப் பூட்டிக் கடலில் எறிந்தும், சமணர் சொல் கேட்டுப் பல்லவ மன்னர் இழைத்த பலப்பலக்

கொடுமைகளைத் தாங்கியவர் அப்பர். தாங்கொணா இன்னல்களைக் கடந்தும் போராடி நின்று, சைவ மறுமலர்ச்சிக்கும் பெரும் சமூக மாற்றத்திற்கும் வித்திட்ட ஆளுடைய அரசர் அவர். சிவன்பால் கொண்ட பத்திமை உணர்வால் பட்டை தீட்டப்பெற்ற வைரம்போல மிளிரும் அப்பரின் வாழ்வு மனதை உருக்கும் அன்பும், அறமும்; நெறிகள் நிறைந்த பணிவும், பொறையும்; உடலை வருத்தும் வலியும் உழைப்பும் நிறைந்தது. வியக்கவைக்கும் இப்பண்புகளால் அறுபத்து மூவரில் தனித்தொளிர்கிறார் திருநாவுக்கரசர்.

திருமுறை பாடிய ஒவ்வொருவர் எழுத்திலும் பலவித உணர்வுகளுண்டு. அவர்களுள், அப்பருடைய பாடல்களில் வாழ்வில் கண்ட சோதனைகளின் வலியும், துடிப்பும், குழைவும், நெகிழ்வும் நிறைந்திருக்கும். பதிகங்கள் மூலம், தம் வாழ்வுப் பாதையையும் இறைத்தொண்டின் ஆழத்தையும் வயது முதிர்ந்தாலும் ஆற்றலோடு இயங்கச் செய்யும் பத்திமையின் வலிமையையும் காட்டுபவர் அவர். நம் இல்லத்துப் பெரியவர்போலக் கைப்பிடித்துக் கோயில்களுக்குக் கூட்டிச்சென்று, கோயிலின் பெருமை, உள்ளுறையும் இறைவனின் பெருமை, கோயிலின் பின்னுள்ள புராணக்கதை, ஊரின் சிறப்பு, அதில் வாழும் மக்கள் சிறப்பு, ஆடலும் பாடலும் பிறகலைகளும் தழைத்த நிலை, அக்காலத்தே புழக்கத்தில் இருந்த இசைக்கருவிகள் என்னென்ன, சுற்றியுள்ள விலங்குகள் பறவைகள் மலர்கள், என்று பல்வேறு வரலாற்றுத் தகவல்களைத் தேர்ந்த இறையுணர்வோடு கலந்தளிப்பவர்.

படிப்போரைக் கரைந்துருகச் செய்யும் அவர் பாடல்களால் நாம் அறிவது ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத்தின் சமயச் சூழலை மட்டுமல்ல, சமூகச் சூழலையும்தான். அப்பருடையது சைவ சமய வரலாற்றில் மிகவும் முக்கியமான காலம். அவர் காலத்தில், தமிழகத்தின் பெரும்பான்மைப் பகுதியை ஆண்ட பல்லவர்கள் சமணப் பற்றாளர்களாக இருந்தனர். களப்பிரர் காலம் தந்த தொய்வுக்குப்பின், மன்னர் சிம்மவிஷ்ணுவின் திறத்தால் ஆறாம் நூற்றாண்டில் பல்லவர் மறுபடி கோலோச்சினர். ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் காஞ்சியில் ஆட்சிப்பொறுப்பேற்ற சிம்மவிஷ்ணுவின் மகன் முதலாம் மகேந்திரவர்மரின் காலம் மொழி, அரசியல், சமயம், கோயில்கள், கலைகள் என்ற பல பரிமாணங்களில் தமிழகத்தின் மறுமலர்ச்சிக் காலமெனப் போற்றப்படுகிறது. மகேந்திரரின் சமகாலத்தவரான அப்பர், மகேந்திரரால் பல கொடுமைகளுக்கு ஆளாகிப்பின் அதே மகேந்திரரைச் சைவத்திற்கு மாறச்செய்தது, சமயமாற்றம் மட்டுமல்ல, மிகப்பெரிய சமூகமாற்றமும்கூட. தந்தை சிம்மவிஷ்ணுவால் அரசியல் எழுச்சியும் மகன் மகேந்திரரால் கலை எழுச்சியும் கண்ட தமிழகத்தில் பெரும் சமய எழுச்சியும் சமூக மறுமலர்ச்சியும் இணைந்தது திருநாவுக்கரசர் என்னும் அந்தச் சைவப் பற்றாளரால்.

அப்பரும் சம்பந்தரும் சமகாலத்தவர் எனினும், சம்பந்தரினும் அப்பர் மூத்தவர்; நாவுக்கரசருக்கு ‘அப்பரே’ என்று அன்புடனும் மதிப்புடனும் பெயரிட்டவரும் அவரே. இவ்வகையில், களப்பிரருக்கு முந்தைய சிவவழிபாட்டிற்கும் திருத்தலங்களுக்கும் – சைவம் ஓங்கி நிலைபெற்ற மகேந்திரர்காலச் சிவவழிபாட்டிற்கும் இடையிலான வரலாற்றுப் பாலமாகத் தொடர்ச்சியைக் காட்டுபவை அப்பரின் பாடல்கள். பதிகம் பாடும் முறையிலும் ஒரு நெறிமுறை

வகுத்துச் செய்தியளிப்பது அவர் சிறப்புக்களுள் மற்றொன்று. தமக்கு முந்தைய நாயன்மார்களுள் ஐவரை அடையாளம் காட்ட திருக்குறுக்கை வீரட்டானப் பதிகம்; இராவணனை மட்டுமே முழுமையாக இணைத்துப் பாடும் திருமறைக்காடு மற்றும் திருக்கயிலாயத்துப் பதிகங்கள்; 'இரக்கமாயென் உடலுறு நோய்களைத் துரக்கனைத் தொண்டனேன் மறந்துய்வனோ' என்று நோயையும் வினைகளையும் தீர்த்தமைக்கு நன்றி கூறத் திருவண்ணாமலைப் பதிகம் என்று அடுக்கிப்போகப் பட்டியல் மிக நீண்டது. அவற்றில் இரண்டு செய்திகளை இங்கு காண்போம்.

### திருக்கழுக்குன்றத்துப் பழங்கோயில்

விஜயாலயருக்குப் பின் வந்த ஆதித்த சோழருடைய திருக்கழுக்குன்றத்துக் கல்வெட்டு, கழுக்குன்றத்துக் கோயில் பெருமானுக்குக் கந்தசிஷ்ய பல்லவர் (பொதுக்காலம் 436460) நிலம் அளித்ததாகவும் அதை நரசிம்மவர்மர் தொடர்ந்து நடத்தியதாகவும் குறிக்கிறது. (K.A.N. Sastri, Cholas, பக். 111)

நாயன்மார்களின் பாடல் பெற்றதால்தான் நூற்றாண்டுகளாய் வழிபாட்டில் இருந்த திருத்தலங்கள் அடையாளம் காணப்பட்டன. சைவ மறுமலர்ச்சிக்கு முன்னிருந்த கழுக்குன்றத்துக் கோயிலை அப்பர்

**பூவினின்மேல் நான்முகனும் மாலும் போற்றப்**
**புணர்வரிய பெருமானைப் புனிதன்றன்னைக்**
**காவலனைக் கழுக்குன்றம மர்ந்தான் றன்னைக்**
**கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே**

என்று பாடுவதோடு தம் பாக்களால் மறுஅறிமுகம் செய்கிறார். திருவதிகை வீரட்டானத்தில் தொடங்கிய தம் சைவநெறி வாழ்வின் நீண்ட பயணத்தைத் திருப்புகலூரில் திருவடிப்பேறு பெற்று நிறைவுசெய்த அப்பர், திருப்புகலூர் திருப்பதிகத்திலும் கழுக்குன்றத்துக் கடவுளைக் 'கழுக்குன்றத்து உச்சியாய் கடவுளே நின் பூவார்ந்த பொன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர் மேவிய புண்ணியனே' (6.099.07) என்று குறிப்பிடத் தவறவில்லை.

### சிவனருள் பெற்ற கோச்செங்கணான்

அடுத்தது, அப்பருக்கு முந்தைய அடியார் 17 பேருள் ஒருவரான கோச்செங்கணான் பற்றியது. ஐந்தாம் நூற்றாண்டில் தமிழகத்தை ஆண்ட கோச்செங்கணான் 70 கோயில்கள் கட்டினார் என்று திருமங்கையாழ்வார் பாடும் முன்பே, திருத்தண்டலையையும் திருவைகல் மாடக்கோயிலையும் செம்பியன் கோச்செங்கணான் கட்டியதாகக் குறிக்கிறார் சம்பந்தர். ஆனால், சிவனுக்குப் பல கோயில்கள் அமைத்த செங்கணான் குறித்து அப்பருடைய திருக்குறுக்கை வீரட்டானத்துப் பதிகம் வழங்கும் செய்தி ஆர்வத்தைத் தூண்டுவது.

**சிலந்தியு மானைக்காவிற் றிருநிழற் பந்தர்செய்து**
**உலந்தவ ணிறந்தபோதே கோச்செங் கணானுமாகக்**
**கலந்தநீர்க் காவிரீசூழ் சோணாட்டுச் சோழர்தங்கள்**
**குலந்தனிற் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனாரே**

திருவானைக்காவில் சிவபெருமானுக்குத் திருநிழல் பந்தலமைத்த சிலந்தியை,

மறுபிறப்பில் காவிரி சூழ்ந்த சோழர்குலத்தில் கோச்செங்கணானாகப் பிறக்கச் செய்தார் குறுக்கை வீரட்டனார், என்று திருவானைக்கா கோயிலின் தலபுராணத்தை முதன்முதலில் சொல்பவர் அப்பரே. அதையே, நான்கு நூற்றாண்டுகள் கழித்து, முதலாம் இராஜேந்திரரும் தம் திருவாலங்காட்டுச் செப்பேட்டில் பதிவு செய்கிறார். செப்பேட்டின் வடமொழிப் பகுதியில் சோழ அரசர் மரபு வரிசையில், சிவனருளால் சிலந்தியாய்ப் பிறந்த பிறப்பு நீங்கிவிட்டவரெனக் கோச்செங்கணான் சுட்டப்படுகிறார்.

இறைப்பற்றில் பொதிந்திருக்கும் அன்பை வெளிப்படுத்த மொழி தேவையில்லை; ஏனெனில், அன்பொன்றே பத்திமையின் மொழி. ஆனால், பயன்படுத்தும் மொழி தமிழாக இருப்பின், அது தரும் சுவையே தனி. பதிகம் பாடிய அப்பரின் நோக்கம் சிவனைப் பாடிப் பரவுவதுதான். ஆனால், நாவுக்கரசர் இல்லையா? சமூகம் சார்ந்த கலை, வரலாற்றையும்; நம்பிக்கை சார்ந்த புராணக் கதைகளையும்; மொழி சார்ந்த உவமை, பழமொழிகளையும்; உணர்வு சார்ந்த மகிழ்ச்சி, கோபம், நெகிழ்ச்சியையும் இணைத்துத் தம் பாடல்களில் வாரிவாரி வழங்கி எண்ணியெண்ணி வியக்கச் செய்கிறார். இது, ‘கரும்புதரு கட்டியை இன்னமிர்தைத் தேனைக் காண்பரிய செழுஞ்சுடரைக் கனகக்குன்றை’ என்று அப்பர் குழைந்துருகிய குழகரின் அருள் மட்டுமல்ல, சங்ககாலந்தொட்டு மண்ணையும் மொழியையும் நேசிக்கும் தமிழ்ப் படைப்பாளர்களுக்குத் தமிழன்னை அளித்த கொடை.

### துணைநூல்பட்டியல்

1. டாக்டர் மா. இராசமாணிக்கனார், சைவ சமயம்

2. டாக்டர் மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு

3. டாக்டர் மா. இராசமாணிக்கனார், பெரியபுராண ஆராய்ச்சி

4. டாக்டர் மா. இராசமாணிக்கனார், கால ஆராய்ச்சி

5. டாக்டர் இரா. கலைக்கோவன், அப்பர் எனும் அரிய மனிதர், பகுதி 1,2,3; வரலாறு.காம்

6. KAN Sastri, Cholas

# திருமந்திரம்

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

**பொழிப்புரை:** அன்பாகிய திருவருளும் இன்பாகிய சிவனும் மணியும் ஒளியும்போல் ஒன்றே. அவற்றை இருவேறு பொருள்கள் என்று கூறுவார் மெய்யுணர்வு கைவரப் பெறாதார். மெய்ம்மையான் நோக்கின் அன்பாகிய திருவருளே இன்பாகிய சிவனுக்குத் திருமேனியாகும். அம் முறையான் அன்பே சிவமாகும். இவ்வுண்மையினையும் எவரும் உணர்கிலர். அன்பே சிவம் என்னும் உண்மையினை அருளால் அனைவரும் அறிந்தபின் தாம் இடையறாது திருவடிக்கண் வைக்கும் அன்பாகிய வித்தே சிவமாய் விளைந்து இன்பாய்க் கனிந்து அவ்வன்புடையார்க்கு என்றும் பொன்றாப் பேரின்ப நுகர்வாகும். அவ்வுண்மை ‘சிவமாய் அமர்ந்திருந்தார்’ என்னும் இம்மறை மொழியான் உணரலாம்.

*****

பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை
துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே.

**பொழிப்புரை:** பொன்னையும் வென்று விளங்கும் புலித்தோலை ஆடையாகவுடையவன். மின்னொளிபோல் விளங்கும் ஆருயிராகிய இளம் பிறையினை நிறைமதியாக்கற்குச் சூடினன். அப் பிறை அழகுறப் பொருந்தியிருந்தது. அப் பிறை சிவனைச் சார்ந்தமையால் ‘பதினெண் கணத்தவராலும் ஏத்தப்படுவதாயிற்று.’ சிவபெருமான் திருவெண்ணீற்றுத் திருக்கோலத்தன். அதனால் சுடுபொடியான் என்றழைக்கப்படுவன். அவன்மாட்டு என்னுடைய அளவிலாப் பேரன்பு பிரிவிலாக் கலப்பாகப் பின்னிக் கிடந்தது.

# அருணகிரியின் அருள்நெறி





**டாக்டர். வ.ஜெயபாலன்**

**ஈப்போ ,மலேசியா**

ஆதித்தமிழனின் ஆன்மீகம் அநாதியானது. இதை ஆரம்பித்தவரும் இல்லை. இனி இதை முடித்து வைக்கவும் யாராலும் இயலாது. இதன் ஆழமான வேரை யாராலும் அசைக்க முடியாது. தமிழ் மண்ணின் பக்தி இயக்கத்தை, பழித்தும் இழித்தும், அதை அடியோடு அழிக்கவும் சில அந்நிய சக்திகள் அவ்வப்பொழுது தோன்றிக் கொண்டுதான் இருக்கின்றன. ஆனால், காலங்கள்தோறும் இந்த அருள்நெறியைக் காப்பாற்ற பல அருளாளர்கள் இந்த புண்ணிய பூமியில் அவதரித்துக் கொண்டு வருகிறார்கள். அவர்களில் ஒருவர்தான் அருணகிரிநாதர்.



பதினான்காம் நூற்றாண்டின் இறுதி, பதினைந்தாம் நூற்றாண்டின் ஆரம்பம், தெலுங்கு வம்சாவழியைச் சேர்ந்த பிரபுட தேவராயன் திருவண்ணாமலையைச் சுற்றியுள்ள குறுநிலப் பகுதியை ஆட்சி செய்த காலக்கட்டம். வணிகத்தை முன் வைத்து இஸ்லாமியர்களும் ,கிருஸ்துவ ஐரோப்பியர்களும் தமிழகத்தில் அப்பொழுதுதான் கால் பதிக்கத் தொடங்கினார்கள். இந்தக் காலக்கட்டத்தில், தமிழ் ஆட்சி மொழியாக இல்லை. சைவமும், வைணவமும் சமயச் சழக்குகளில் சிக்கிச் சண்டையிட்டுக் கொண்டிருந்தன.



சைவ சமயச் சாத்திரங்கள் மக்களைக் கவரவில்லை. மாறாக, சிறுதெய்வ வழிபாடுகள் மேலோங்கி இருந்தன. புலால் உண்ணுதலும், மது அருந்துதலும், பொது மகளிர் உறவும் சமுதாயத்தில் சகஜமான ஒன்றாக இருந்தது. சமுதாய சீர்கேடு மிகுந்திருந்தது.

இப்படிப்பட்ட காலக்கட்டத்தில் தான் அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் அவதரித்தார். அவருடைய உண்மையான பெயர் உறுதியாகத் தெரியவில்லை. பின்னாளில் முருகன் அவருக்கிட்ட பெயர்தான் அருணகிரி.

“அருணகிரி நாத எனும் அப்பனே போற்றி” – (பெரியமடம் திருப்புகழ் 0831)

சமயச் சழக்குகளாலும், சமூகச் சீர்கேடுகளாலும் அல்லலுற்ற தமிழ்ச் சமுதாயத்தை அருள்நெறியில் ஈடுப்படுத்துகிறார் அருளாளர் அருணகிரிநாதர். அவர்தான் முருக வழிபாட்டை முறைப்படுத்திய முதல் முருகனடியார். கௌமார நெறியை சைவ சித்தாந்த வழியில் கொண்டு நிறுத்தியதில் அவர் பங்கு அளப்பறியது.

பக்தி நெறியில் கற்பு நெறியைப் பேணி, முருகனை முதன்மைப் படுத்தினாலும், முருகனின் பெயரால் பிற தெய்வ வழிபாட்டிற்கும் உறவுப் பாலம் இட்டவர் அருணகிரிநாதர்.

அவர் சன்மார்க்க நெறியை அறிமுகம் செய்து சமய நல்லிணக்கத்தை நிலை நாட்டுகின்றார். சமயத்தின் பெயரால் சண்டையிடும் சமயவாதிகளை

“கலகலெனக் கண்ட பேரொடு

சிலுக்கிடும் சமய வாதிகள்” (திருப்புகழ் 976) என்று சாடுகிறார்.

அது மட்டுமல்ல அந்த சமயவாதிகள்,

‘சினமுடன், தர்க்கித்து சிலுகிக் கொண்டு

அறுவறும் கைக்குத்து இட்டு, ஒருவர்க்கும்

தெரிவு அருள் சத்யத்தை தெரிசித்து உன் செயல் பாடி” (திருப்புகழ் 0493)

என்று சமயத்தின் பெயரால் அவர்கள் சர்ச்சையிட்டு தெரிவதற்கு அறிய சத்தியத்தைத் தெரிசிக்காததைச் சொல்லுகின்றார்.

அவருடைய சிந்தனைகளை மக்களிடம் சேர்ப்பிக்க அவர் எடுத்துக் கொண்ட ஆயுதங்கள் தமிழும், இசையும். மக்களிடம் தன் சிந்தனைகள் சென்று சேரவேண்டும்

என்று அவர்கள் அன்றைக்குப் பேசிய வடமொழி கலந்த மணிப்பிரவாள நடையிலும், தூயதமிழ் நடையிலும் தன்னுடைய எழுத்துக்களை வடிக்கின்றார்.

அவருக்கு முன் வந்தவர்கள் ராகத்துக்காக எழுதிய நிலையில், அருணகிரிநாதர் மட்டும் தாளத்தை முன் வைத்து, அற்புதமான பல தாளங்களில் இறைவனின் புகழை மக்களிடம் கொண்டு சேர்க்கின்றார்.

இறைவழிபாட்டின் முதல் படிநிலை தனிமனித ஒழுக்கம். காமமும் கள்ளுண்பதும் கடவுளிடம் நம்மை கொண்டு சேர்க்காது. இதை நன்கு அறிந்தவர் அருணகிரிநாதர்.

அவர் காலத்தில் விலைமாதரிடம் செல்லும் பழக்கம் மிகுதியாக இருந்தது. இதன் காரணமாக பல நோய்கள் தோன்றின. சமுதாயம் சீர்கெட்டிருந்தது. இதைக் கண்டு நொந்த அருணகிரிநாதர், பல பாடல்களில் இதைச் சாடி எழுதியுள்ளார். காமத்தினால் வரும் சுகத்தைக் கூறி, அது நிலையில்லாதது, நோய்களைத் தருவது, சிறுமைகளைத் தருவது, இறைவனை அடையவிடாது என்றெல்லாம் மக்களுக்குச் சொல்கிறார். முருக பக்தியால் வரும் பெருமைகளை பட்டியலிடுகின்றார். இறைவனின் பொற்பாதம் ஒன்றே நிலையானது மற்றவையெல்லாம் நிலை யில்லாதது என்ற உண்மையை மக்கள் மனதில் தைக்கும்படி எழுதுகின்றார். இவையெல்லாம் அருணகிரிநாதர் இந்த உலக மக்களுக்கு ஆற்றிய அருட்பணிகள்.

ஆனால், இன்றைக்கு ஒரு சிலர்




அருணகிரிநாதரின் இளமைக் காலத்தை கொச்சைப் படுத்தி, இவர் இளமையில் காமுகராக இருந்தவர், அதனால்தான் பல இடங்களில் விலைமாதர் சுகத்தைப் பற்றியும், அதன் விளைவுகளைப் பற்றியும் எழுத முடிந்தது என்று பேசியும்,எழுதியும் வருகின்றனர். இது ஆதாரப் பூர்வமானதா? இதன் உண்மைத் தன்மை என்ன என்பது ஆய்வுக்குரியது.

## இளமையில் அருணகிரிநாதர் காமுகரா?

முதன்முதலில் அருணகிரிநாதரைப் பற்றிய ஆய்வை மேற்கொண்டவர் தணிகைமணி வ.சு.செங்கல்வராயப் பிள்ளை எம்.ஏ அவர்கள்தாம். 1947 இல் அவர் எழுதிய "அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்" என்ற நூலில்தான், அருணகிரிநாதரின் வாழ்வு ஆராயப்படுகின்றது. அவர் பிறந்து, வாழ்ந்து ஐந்நூறு வருடம் கழித்து அவரைப் பற்றிய தகவல் சேகரிக்கப் படுகின்றது என்பதை நாம் இங்கே குறிப்பிடுவது அவசியம்.

"ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளது சரித்திரம் கர்ணபரம்பரையாக பல்வேறு வகையாகக் கூறப்பட்டு வருகின்றது. உண்மைச் சரித்திரம் இதுதான் என்று திடம்பெற உரைக்க இடந்தரவில்லை" என்பது தணிகைமணியின் முன்னுரை.

அருணகிரிநாதர் காமுகராக இளமையில் இருந்தார் என்பதற்கு, தணிகைமணி அவர்கள் திருப்புகழ் பாடல்களையே ஆதாரமாகச் சொல்கிறார்கள். இவை அகச் சான்றுகள் மட்டுமே .

அருணகிரிநாதரின் வாழ்க்கை வரலாறைப் பற்றிய புறச்சான்றுகள் மிகக்குறைவு.கல்வெட்டுகளோ, அவர் காலத்தில் வாழ்ந்த அறிஞர்களின் பதிவோ காணக் கிடைக்கவில்லை. அங்கொன்றும்,இங்கொன்றுமாக இருந்த திருப்புகழே 120 வருடங்களுக்கு முன்புதான் வடக்குப்பட்டு சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் முயற்சியால் தொகுக்கப்பட்டது. அதற்கு அவர்களின் புதல்வர் தணிகைமணி வ.சு.செங்கல்வராயப் பிள்ளை விரிவுரை எழுதினார்கள்.


மனம் உடைந்த அருணகிரியார் கோயில் கோபுரத்திலிருந்து விழுந்து இறக்கத் துணிதல்

தணிகைமணிக்குப் பின்வந்த தமிழறிஞர்கள் அவர் அடியொற்றியே அருணகிரிநாதர் வரலாற்றை எழுதினர். அருணகிரிநாதர் இளமையில் தகாத வாழ்க்கை வாழ்ந்தார் என்றே அவர்களும் குறிப்பிடுகின்றனர். போதக்குறைக்கு தமிழ்த் திரைப்படங்களின் பங்களிப்பு வேறு. 1937இல் டி.எம் மாணிக்க பாகவதர் நடித்த அருணகிரிநாதர் திரைப்படம் வெளிவந்தது. 1964இல் டி.எம் சௌந்திரராஜன் அருணகிரிநாதராக நடித்த அருணகிரிநாதர் என்ற திரைப்படம் வெளிவந்தது. இவை இரண்டிலுமே அருணகிரிநாதர் இளமையில் ஓர் உல்லாசப் பிரியர் என்றும், பின் பால்வினை நோய்களால் பாதிக்கப்பட்டு தற்கொலைக்கு முயற்சி செய்தவர் என்றும் மிகவும் அழுத்தத்திருத்தமாக காட்டப்பட்டு இருந்தது. ஆக, திரைப்படங்களும் அருணகிரிநாதரை இள வயதுக் காமுகராகவே மக்கள் மனதில் பதிய வைத்தன. ஆனால், அதில் உண்மை யில்லை.

## கருணைக்கோர் அருணகிரி

பாதிக்கப்பட்ட மக்களின் சார்பாக நீதிமன்றங்களில் பேசுகின்ற வழக்கறிஞர்களைப் போன்றவர்கள் நம்முடைய அருளாளர்கள்.மற்ற மனிதர்களின் குறைகளை தம்மேல் ஏற்றிக் கொண்டு, அந்த மனிதர்களுக்காக

இறைவனிடம் இறைஞ்சுபவர்கள் நம்முடைய ஞானிகள்.

இப்படி மற்றவர்களின் குறைகளை தம்மேல் ஏற்றி,அந்த மக்களின் சார்பாக இறைவனின் அருளை வேண்டிய அருளாளர்கள் பலருண்டு.திருவாசகம் பாடிய மாணிக்கவாசகப் பெருமான், கிட்டதட்ட 46 இடங்களில் தன்னை "நாயேன்" என்றும் 5 இடங்களில் தான் "வஞ்சகன்" என்றும் கூறிக் கொள்கிறார்.

"இந்திரிய வயமயங்கி இறப்பதற்கே காரணமாய்

அந்தரமே திரிந்துபோய் அருநகரில் வீழ்வேன்"

என்று கண்டபத்து என்ற பதிகத்தில்,தான் ஐம்புலன் வழி சென்று மயங்கிதாகச்மாணிக்கவாசகப் பெருமான் சொல்லுவார்.

"நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேன்"

என்று தான் தீ நெறி வழி சென்றதாக அச்சோ பதிகத்தில் குறிப்பிடுவார். இப்படிப் பல பாடல்கள் உண்டு. இவையெல்லாம்,மாணிக்கவாசகர் மனித குலத்தின்மேல் உள்ள அன்பின் காரணமாக மற்ற மனிதர்களின் பாவத்தையெல்லாம் தம் மீது ஏற்றுக் கொண்டு பாடுவது.

மற்ற அருளாளர்களும் இதற்கு விதிவிலக்கல்ல.

திருநாவுக்கரசர் சைவத்தில் பழுத்த பழம். அவர்கூட "கழித்திலேன் காம வெந்நோய்" என்று திருவடிகை வீரட்டானப் பதிகத்தில் பாடுகின்றார்.

இளம் வயதிலேயே இறையருள் பெற்ற திருஞானசம்பந்தர் கூட,

"குவிமுலையார் முகத்தினின்று

சேலோடச் சிலையாடச் சேயிழையார்

நடமாடுந் திருவையாறே"

என்று திருவையாற்றின் பெருமையை அங்கே வாழும் பெண்களின் அழகை வர்ணித்து,அதனுடன் சேர்த்துச் சொல்லுகின்றார்.

நம்முடைய பக்தி இலக்கியங்களில் இப்படிப் பல உதாரணங்களை சொல்லிக் கொண்டே போகலாம். ஆனால், அருணகிரிநாதரை மட்டும் அவர் பாடிய பாடல்களை வைத்து அவர் தன்னுடைய வாழ்க்கையைத்தான் அவர் பாடல்களில் குறிப்பிடுகின்றார் என்ற முடிவுக்கு இன்றைய தமிழறிஞர்கள் வந்து விட்டது நாம் செய்த தவக்குறைவு என்றுதான் சொல்ல வேண்டும்.

அவர் எப்படி மற்றவர்களுடைய பாவத்தை தம்மீது ஏற்றுக்கொண்டு அவர்களுக்காக முருகனின் அருளை வேண்டுகிறார் என்பதைக் காட்ட ஒரு பாடலை மட்டும் மேற்கோளாகப் பார்ப்போம்.

அருணகிரிநாதர் காஞ்சி குமரகோட்டம் போகின்றார். அங்குள்ள முருகவேளைத் தரிசிக்கின்றார். அங்குள்ள மக்கள், கந்தவேளைப் பாடாமல், கண்டவர்களை காசுக்காகப் பாடுவதைக் காண்கின்றார்.

அவர்கள் சம்பாதித்த காசுபணத்தை வேசிகளிடம் கொண்டு சேர்க்கும் அவலத்தைகண்டுமனம்நோகின்றார்.இதை தம்மேல் ஏற்றிக்கொண்டு,அவர்களுக்காக முருகனின் அருளை மன்றாடிக் கேட்கின்றார்.

"அறிவிலாப் பித்த ருன்ற னடிதொழாக் கெட்ட வஞ்சர்

அசடர்பேய்க் கத்தர் நன்றி ...... யறியாத

அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகளாக் கிப்பு கழ்ந்து

அவரைவாழ்த் தித்தி ரிந்து ...... பொருள்தேடிச்

சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருவுலாத் தித்தி ரிந்து

தெரிவைமார்க் குச்சொ ரிந்து ...... அவமேயான்

திரியுமார்க் கத்து நிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து

தெளியமோட் சத்தை யென்று ...... அருள்வாயே

(காஞ்சிபுரம் திருப்புகழ் 352)

இப்படித்தான் பல திருப்புகழ் பாடல்களில் உலக மாந்தரின் குறைகளை தம்மேல் ஏற்றிக் கொண்டு அவர் பாடுகிறார். இதனால்தான் அவரை "கருணைக்கோர் அருணகிரி" என்று தாயுமான சுவாமிகள் அழைத்தார்.அருணகிரியின் கருணை அளப்பரியது.அவர் தனக்கு மட்டும் அருள் தருமாறு முருகப் பெருமானைக் கேட்கவில்லை.மாறாக,இந்த உலக மக்களின் பாவங்களை மன்னித்து அவர்களுக்கும் அருள்வாய் என்றே இறைவனிடம் இறைஞ்சுகிறார்.

திருப்புகழ் பொதுவானது. அதை அருணகிரிநாதர் தனக்காகப் பாடவில்லை. தாங்கள் செய்த பாவங்களை உணர்ந்து, முருகனின் புகழைப் பாடி இந்த மண்ணுலக மக்களெல்லாம் உய்ய வேண்டும் என்றுதான் அருணகிரிநாதர் முருகனின் உத்தரவின்படி திருப்புகழை நமக்காக அருளினார் .இதையும் அவரே திருப்புகழில் சொல்லி வைத்தார்.

"ஏனோரும் ஓதும் மாறு தீதற

நான் ஆசு பாடி ஆடி நாடொறு

ஈடேறும் மாறு ஞான போதக ஞ்ஞ்..
மான்புறாதோ (திருப்புகழ் 1126)

என்பது அருணகிரிநாதர் வாக்கு.

## சிற்றின்பம் – பேரின்பம்

அருணகிரிநாதர் பல இடங்களில் பேரின்பத்தின் பெருமையைச் சொல்வதற்கு சிற்றின்பத்தை உதாரணமாகக் காட்டுகிறார். சிற்றின்பம் புலன்களுக்கு இன்பம் தருவது. ஆனால் நிலையில்லாதது. இறைவனிடம் நமைச் சேர விடாது.

பேரின்பம் என்பது சிற்றின்பத்தைப் போன்றது. ஆனால், நிலையானது. இந்த ஆன்மாவை ஈடேற்றக் கூடியது.

சிற்றின்பம் என்பது மனிதனுக்குத் தெரிந்த ஒன்று. அவன் அனுபவித்த இன்பம். பேரின்பம் அவன் அனுபவிக்காதது.

அதனால், மனிதனுக்குத் தெரிந்த சிற்றின்பத்தைச் சொல்லி, அவன் உணராத பேரின்பத்தை பல இடங்களில் விளக்குகிறார் அருணகிரிநாதர்.

"ஓலம் இட்ட சுரும்பு தனா தனாவென" என்று துவங்கும் திருக்கழுக்குன்றத் திருப்புகழ்கில்,முதல் பாதிப் பாடல் முழுவதும் காமலீலைகளால் வரும் உடல் இன்பத்தைச் சொல்கிறது.

அந்தப் பாடலின் அடுத்த பகுதியில் இந்த அற்ப சாகரத்தில் மனம் அழுந்தக் கூடாது, சதாசர்வகாலமும் நான் ஆறெழுத்தையே நினைத்து குகா குகா வென்றிருக்கும் திண்மை எனக்கு வரவேண்டும் என்று அதில் வேண்டுகிறார்.

"ஆசை யிற்கை கலந்து சுமா சுமாபவ
சாக ரத்தி லழுந்தி எழா எழாதுளம்
ஆறெ ழுத்தை நினைத்து குகா குகாவென ஞ்ஞ்ஞ்.. வகைவராதோ"

(திருப்புகழ் 543)

என்பது அருணகிரிநாதரின் திருவாக்கு. ஆக சிற்றின்பத்தைச் சொல்லி,பல இடங்களில் பேரின்பத்தின் அவசியத்தைச் சொல்கிறார்.

அருணகிரிநாதர் சிற்றின்பப் பிரியர் அல்ல. சித்தாந்தம், வேதாந்தம், யோகம், சித்தர்நெறி, திருமுறைகள், இதிகாசங்கள், புராணங்கள் என்று சகல ஞான நூல்களையும் கற்றுத் தேர்ந்தவர். இத்தனை அருட்செல்வங்களையும் பிழையறக் கற்றதால்தான், அவரால் தன்னுடைய இலக்கியங்களில் அவற்றின் சாரத்தைச் சொல்ல முடிந்தது.

இள வயதில் அவர் சிற்றின்பப் பிரியராக இருந்திருந்தால், இவற்றையெல்லாம் படிப்பதற்கு நேரம் இருந்திருக்குமா? இல்லை, அவர் மனம்தான் இந்த அருட் பனுவல்களில் ஈடுப்பட்டிருக்குமா? சிந்திக்க வேண்டிய ஒன்று.பகுத்தறிந்து பார்த்தால், இவ்வளவு படித்த அருணகிரிநாதர். அருள் நெறியில் மட்டுமே இளவயதில் சென்றிருக்க வேண்டும். அந்த அருள்நெறிதான் முருகனின் புகழ் பாட அவருக்கு வழி வகுத்திருக்கும்.

## நிறைவுரை

அருணகிரிநாதர் என்ற அருளாளர், பதினைந்தாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் திருவண்ணாமலையில் அவதரித்தார். முருக வழிபாட்டின் மறுமலர்ச்சி அவரால் வந்தது. அவர் சமய நல்லிணக்கம் பேணும் சன்மார்க்க ஞானியாகத் திகழ்ந்தார். சமயச் சழக்குகளை அவர் வெறுத்தார். அவரால் தமிழும், தமிழ் இசையும் மேம்பட்டன. அவருக்குப் பின் வந்த முருகனடியார்கள் அவரின் வழித்தடத்தையே பின்பற்றினர் என்ற கூற்றுக்கள் மட்டுமே உண்மை.

அவருடைய இளவயது வாழ்க்கை வரலாறு ஆதாரமற்றது.இளவயதில் அவர் சிற்றின்பப் பிரியராக இருந்தார் என்ற கூற்றும் ஆதாரமற்றது.இந்தக் கருத்துக்களை அறிஞர் பெருமக்கள் மக்களுக்கு உணர்த்த வேண்டும். அருணகிரிநாதரென்ற அப்பழுக்கில்லாத அவதார புருஷரை குருவாகக் கொண்டு முருக வழிபாடு உலகமெல்லாம் பரவ

வேண்டும்.

அருணகிரியின் அருள்நெறியை அகிலம் உணர வேண்டும். அந்த நெறியை உணர்ந்த மக்களெல்லாம் பேரானந்தத்தில் திளைக்க வேண்டும்.



"அருவம் ஒரு நான்காகி உருவம் ஒரு நான்காகி அவைஇரண்டும்

மறுவியுள உருவருவம் ஒன்றாகி முத்திறமும் வழுத்தவொண்ணாப்

பெருவெளிக்கும் அப்பாலாய் உள்ள பொருள் ஈதெனவே பெரிதும் சேயோன்

ஒருவனையே புகழ்ந்த அருள்அருணகிரி சேவடிப்போது உளத்தில் வைப்பாம்!"

பாம்பன் சுவாமிகள்.

**ஸ்ரீ அருணகிரிநாதப் பெருமான் திருவடிகள் போற்றி!!**

# திருமந்திரம்

## ரசிகமணி டிகேசி விளக்கம்

கற்குழி தூரக் கனகமுந் தேடுவர்
அக்குழி தூர்க்கை யாவர்க்கும் அரியது
அக்குழி தூர்க்கும் அறிவை அறிந்தபின்
அக்குழி தூரும் அழுக்கற்ற வாறே.

பொழிப்புரை: ஒன்றானும் ஒரு காலத்தும் தூர்க்க முடியாத குழியென்பார் 'கற்குழி' என்றனர். அஃதாவது வயிறு. அக் குழியைத் தூர்க்க வேண்டிப் பொன் முதலியவற்றைத் தேடுவர். எப்படிப்பட்டவர்க்கும் அருள் துணையின்றி அக் குழியைத் தூர்க்க முடியாது. அக் குழியினைத் தூர்க்கும் அறிவாகிய திருவடியுணர்வை உணர்ந்தபின் மலமாயைகன் மங்களாய அழுக்கறும்.. அழுக்கறவே அக் குழி தானே தூரும்.

*****

தொடர்ந்தெழு சுற்றம் வினையினுந் தீய
கடந்ததோர் ஆவி கழிவதன் முன்னே
உடந்தொரு காலத் துணர்விளக் கேற்றித்
தொடர்ந்துநின் றவ்வழி தூர்க்கலு மாமே.

பொழிப்புரை: ஒருயிரைத் தொடர்ந்து வருத்திக்கொண்டு வரும் சுற்றத்தார் வினை யினும் கொடியர்: ஆவி உடம்பைவிட்டுக் கடந்து கழிவதன் முன்னே ஐம்புலன்கள் வழிச் செல்லாது மாறுபட்டு ஒரு காலத்துத் திருவடியுணர்வாகிய திருவிளக்கினைத் திருவருளால் ஏற்றுங்கள். அங்ஙனம் ஏற்றினால் எக்காலத்தும் மனமாசாகிய அழுக்கறும். பிறப்பறுவதாகிய குழியும்.

## கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
## கோவிலூர் புதையல்கள் - 6

# சமிவன சேத்திர மான்மிய வசனம்

**- நூல் அறிமுகம்**



காசிகாநந்த சுவாமிகள்



**- கு. அன்பு மெய்யப்பன்,**
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

கோயிலூர் மடம் மிகப் பெரும் சீட பாரம்பரியம் கொண்டது. கோயிலூரின் கிளை மடங்களே 108 மடங்கள் இருந்திருக்கின்றன. அதன் கிளை மடங்களில் ஒன்றான திருப்புவன மடத்தைத் தோற்றுவித்த சீர்வளர்சீர் காசிகானந்த ஞானாசார்ய சுவாமிகள் தனது ”சாது சங்க நிறுவல் விழாக் கூட்ட வைபவம்” என்னும் நூலில் குறிப்பிட்டு, அதனை அட்டவணையாகவும் பதிப்பித்துள்ளார். கோவிலூர் மடத்தின் உ.வே.சா என்றால் அது காசிகானந்த ஞானாசார்ய சுவாமிகளே ஆவார். அந்த அளவுக்கு கோயிலூர் மடம் பற்றிய தகவல்களை நூல்களாகப் பதிப்பித்துள்ளார்.

கோவிலூர் மடத்தைத் தோற்றுவித்த முத்திராமலிங்க ஆண்டவருக்குச்

சீடர்களாகச் சுட்டிக்காட்டப்படுபவர்கள் 36 பேர். அவர்களில் ஒருவர் மேலமடம் பழநியப்ப ஐயா ஆவார். அவரால் பதிப்பிக்கப்பட்டது கோ யிலூர்ப் புராணம் என்னும் சமிவன சேத்திர மான்னிய வசநம் ஆகும்.

பழநியப்ப ஐயா அவர்களால் கட்டப்பட்டதே தற்போது காரைக்குடியில் உள்ள மேலமடமாகும். இம் மடம் தொடங்கப்பட்டதற்கு ஒரு வரலாறு கூறப்படுகிறது. அக்காலத்தில் காரைக்குடி 63வர் மடம் உருவாக்கப்பட்டு, அதில் வன்தொண்டர் சொக்கலிங்க ஐயா அவர்கள் சைவசித்தாந்த பாடங்களைக் கற்பித்து வந்திருக்கிறார்கள். வேதாந்த பாடங்களைக் கற்பிக்கவும் ஒரு மடம் தேவை எனக் கருதிய பழநியப்ப ஐயா அவர்கள் உருவாக்கிய மடமே மேலமடமாகும். நகரத்தார்கள் பலரிடம் நன்கொடை பெற்று இம்மடத்தைக் கட்டியுள்ளார். ஆகவே இவர் மேலமடம் பழநியப்ப ஐயா என அழைக்கப்படுகிறார். அவரால் கோ யிலூரின் முதல் மூன்று பீடாதிபதிகளின் வரலாறும் இயற்றப்பட்டு இந்நூலில் சேர்க்கப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலின் முதற் பதிப்பு 1900இல் பழனியப்ப ஐயா அவர்களால் அச்சிடப்பட்டுள்ளது. 1929இல் மற்றொரு பதிப்பு பழனியப்ப ஐயா அவர்களின் குடும்பத்தாரால் பதிப்பிக்கப்பட்டள்ளது.

இந்நூல் திருவிடை மருதூரைச் சேர்ந்த பிச்சுசாஸ்திரிய சுவாமிகளால் வடமொழியில் எழுதப்பட்ட கந்த புராணத்திலிருந்து சமிவனம் என்று அழைக்கப்படும் கோயிலூர்ப் புராணம் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இது முதல் பகுதியாகவும், இரண்டாம் பகுதி, பழனியப்ப ஐயா அவர்களின் முகவுரையோடு தொடங்கி, ஆண்டவர் துதி, துறவாண்டவர் துதி, கருணாநிதி சுவாமிகள் துதி ஆகியவற்றில் கோ யிலூரின் முதல் மூன்று பீடாதிபதிகள் பற்றி பலராலும் பாடப்பட்ட பாடல்கள் தொகுக்கப்பட்டு, ஆண்டவர், துறவாண்டவர், கருணாநிதி சுவாமிகள் ஆகிய மூவரின் சுருக்கமான வரலாறு இணைக்கப்பட்டுள்ளது.

முதற் பகுதியில் கோயிலூர் கொற்றவாளீசுவரர் கோயில் உருவான வரலாறு புராணங்களில் வழி விளக்கப்படுகிறது.

சேவு.பழ. பழனியப்ப ஐயா அவர்களின் முகவுரையை அப்படியே இங்கு தருகிறேன். ” உலகத்தில் புருடர்கள் சுருதிஸ்மிருதிகளை ஓதி யுணர்ந்து அவற்றிற் சொல்லிய விதிப்படி நடத்தலோடு அப்பெரியோர் ஒழுக்கங்களைக் கண்டும் கேட்டும் ஒழுகுவது சகஜமாம். அப்பெரியோர் யாவரெனின் பிரஹ்மஞான நிஷ்டர்களாய் உலகத்திற்கு உபகாரமே செய்துகொண்டிருப்பவர், அத்தகைய பெரியோர் மகிமையைச் சாஸ்திரங்கள் அளவின்றிக் கோஷிக்கின்றன. ஆதலால் அவர்கள் சரித்திரத்தைப் பிரசித்தப் படுத்தினால் சிரேயசுண்டாதலன்றி அதனைப் படிப்பவர் கேட்பவர் யாவருக்கும் புண்ணியமாகிய அதிருஷ்ட பலமும், அவர் சரிதங்களைக் கேட்குங் காலத்து அவர் ஒழுகியவாறே யாமும் ஒழுக வேண்டுமென்று உண்டாகும் எண்ணமாகிய திருஷ்டபலமும் உண்டாமெனக் கருதி, முற்கூறிய இலக்கணம் அமைந்தவர்களும்

கோவிலூர்ப் பரம்பரையில் முதன் மூன்றுபட்டத்து இருந்தவர்களுமாகிய ஆண்டவர், துறவு சுவாமிகள், கருணாநிதி சுவாமிகள் என்னும் மூவர் சரித்திரத்தையும் அவர்கள் மாணாக்கர்களால் கேட்ட வண்ணம் சுருக்கிச் சிறு புத்தக ரூபமாக்கி, அதற்கு ஆண்டவர் சரித்திரச் சுருக்கமெனப் பெயரிட்டு, ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிகர் அநுமதியின் பேரில் பதிப்பிக்கலானேன். காரைக்குடி – சேவு – பழ"

(பிரம்ம ஞான நிஷ்டர்கள் – பிரம்மம் என்பது இறைவெளி. அது எங்கும் நிறைந்துள்ளது. பிரம்மத்தின் முதற் பொருள் இறைவெளி, ஆறறிவு கொண்ட மனித மனம் இறுதியாக உள்ளது. ஆதி முதல் அந்தம் வரை அனைத்தையும் இணைத்து ஒரே அகக் காட்சியாகக் காண்பதே பிரம்ம ஞானம் என்பது அதனை உறுயுடன் கடைபிடிப்பவர்கள் நிஷ்டர்கள்)

(சிரேயஸ் – இச்சொல்லோடு மற்றொன்றும் சேர்த்துச் சொல்லப்படுகிறது. பிரேயஸ். இவை சமக்கிருதச் சொற்கள். சிரேயஸ் என்றால் பேரின்பம், பிரேயஸ் என்றால் சிற்றின்பம். ஆன்மீக குருக்களாகிய மூவரின் வரலாற்றைப் படித்தால் பேரின்பத்தைப் பெறலாம் என்பது கருத்து)

(பொன்னபல சுவாமிகள் – மூன்றாம் பட்டம் சிதம்பரஞானதேசிகர் என்ற கருணாநிதி சுவாமிகளின் மாணாக்கர். இராமநாத புரம் அனுமந்தக் குடியில் 1883 இல்பிறந்தவர். 16 வயதில் பெற்றோருக்குத் தெரியாமல் சிதம்பரம் வந்தவர். அங்கு துறவறம் மேற்கொண்டவர். அங்கு பெத்தாச்சி சுவாமிகள் என்பாரின் வழிகாட்டுதலின்படி கருணாநிதி சுவாமிகளின் மாணாக்கர் ஆனவர். வேதம் கற்கும் மாணாக்கருக்குப் பாடம் கற்பிக்கும் அளவிற்கு உயர்ந்த நிலையில் கோயிலூர் மடத்தில் இருந்தவர்.

மூன்றாம் பட்டம் சிதம்பர ஞானதேசிகரின் முக்திக்குப் பின் அடுத்த நிலையில் இருந்தவர் பொன்னம்பல சுவாமிகள். ஆனால், கோயிலூர் மடத்தின் விதிகளில் ஒன்று, மடத்தின் மடாதிபதியாக வருபவர் நகரத்தார் இனத்தைச் சார்ந்தவராக இருக்க வேண்டும் என்பது. கிளை மடங்களுக்கு இவ்விதி பொருந்தாது, ஆகவே, பொன்னம்பல சுவாமிகள் பட்டத்திற்கு வரவில்லை. நான்காம்பட்டம் இராமநாத ஞானதேசிகரை நியமித்தவர் இவரே. ஐந்தாம் பட்டம் வீரசேகர ஞானதேசிகர் மடாதிபதி பதவியில் நாட்டம் இல்லாமல் இருந்த போது அவரை நெறிப்படுத்தியவரும் இவரே. இவரே சிதம்பரத்தில் தனது குருவின் பெயரில் "கோவிலூர் சிதம்பர ஞானதேசிகர் மடம்" என்ற பெயரில் கிளை மடத்தை உருவாக்கியவர். தற்போது. சுருக்கமாக "கோ. சித.மடம்" என்றழைக்கப்படுகிறது. இப்பெருமைமிகு பொன்னம்பல சுவாமிகளின் அனுமதியின் பேரில் இந்நூலைப் பதிப்பித்துள்ளார் பழனியப்ப ஐயா அவர்கள். நமக்குப் பெரும் புதையலாக இந்நூல் கிடைத்துள்ளது ஆண்டவர் அருளால்அன்றி வேறில்லை.

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்

## பொதுவும் சிறப்பும்



- வாகீச கலாநிதி
கி.வா. ஜகந்நாதன்

உலகத்தில் ஒரு வேடிக்கை நடக்கிறது. சுழல் சக்கரம், அழன்று கொண்டே இருப்பது போல, உயிர்க் கூட்டங்கள் இங்கே வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருக்கின்றன. ஆண்டுகள் ஆக ஆக, உலகத்தின் ஜனத்தொகை, பெருகிக் கொண்டே வருகிறது. இந்தப் புதிய மக்கள் எங்கிருந்து வருகிறார்கள்? இதற்கு முன் எங்கே. இருந்தார்கள்? நூறு ஆண்டுக் காலத்தில் ஜனத்தொகை இரட்டித்து விடுகிறது, ஜீவர்களும் எங்கே இருந்தார்கள்

உலகத்தில் உள்ள உயிர்க் கூட்டங்கள், அளவுக்கு அகப்படாதவை. ஜனத்தொகைக் கணக்கு, மனிதர்களின் கணக்கைத்தான். சொல்லுகிறது. மக்களையல்லாமல் எத்தனையோ கோடி கோடி உயிர்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன. கண்ணுக்குத் தெரியாத பூச்சி முதல் மிகப்பெரிய காண்டாமிருகம் வரையில் பலபல விலங்குகள் உலகில் உயிர் வாழ்கின்றன. அந்த உயிர்கள். எப்போதும் அப்படியே இருப்பதில்லை. பிறந்தும் இறந்தும் மீட்டும் பிறந்தும் வருகின்றன. அப்படி வருகின்ற சுழற்சியில் அவை வெவ்வேறு பிறவிகளை எடுக்கின்றன. புழுவாக இருந்த உயிர், மறுபிறவியில் புழுவாகவே பிறக்கும் என்பது இல்லை. வேறு விலங்காகவோ. மனிதனாகவோ பிறக்கலாம். இப்படி மாறி மாறி வரும் பிறப்பின் மிக உயர்ந்தது மனிதப் பிறவி. இப்போது மனிதர்களின் தொகை மிகுதியாக இருக்கிறது. பல வகையான விலங்குகளின் தொகை குறைந்து விட்டது. அந்தப் பிராணிகளின் கணக்கை எடுப்பவர் யார்? எத்தனை வகையான விலங்கினங்கள், முன்பு இருந்தன என்றும் இப்போது இல்லாமல்

ஒழிந்தன என்றும் ஆராய்ச்சி வல்லுநர்கள் சொல்கிறார்கள்.

இப்படி உயிர்கள் இறந்து, மீட்டும் வேறு வடிவெடுத்துப் பிறக்கும் செயல், இடைவிடாமல் நடந்து கொண்டே இருக் கிறது. நாடக மேடையில் வேறு வேறு கோலம். புனைந்து நடிகர்கள், வேறு நாடகத்தில், முன் நாடகத்தில் இல்லாத வேறுபட்ட கோலங்களைப் புனைந்து நடிக்கிறார்கள். இவ்வாறு. அவர்களை நடிக்கும்படி இயக்கும் இயக்குநர் ஒருவர் இருக்கிறார்; அவர், தாமே சில பாத்திரங்களாகச் சல சமயங்களில் ‘ வருவார். பல சமயங்களில் அவர், நடிக்காமலே நாடகத்தை நடத்துவதும் உண்டு, இவ்வாறு பிரபஞ்ச நாடகத்தை நடத்துகிற ஒருவன் இருக்கிறான்.

பொடம்மலாட்டத்தில் திரைக்குப்பின் இருந்து பொம்மைகளை ஆட்டுவிப்பது போல ஆட்டுகிற சூத்திரதாரி அவன். மாயை என்னும் திரையை நீக்கி அவனைப் பார்க்க வேண்டும்.

இவ்வாறு உயிர்க் கூட்டங்களுக்கு, உடம்பைக் கொடுத்துப் பிறக்கும்படி செய்கிற இறைவனே, அந்த உடம்பி னின்றும் இறக்கச் செய்து, கோலத்தை மாற்றுகின்றான். அவன் எங்கும் இருப்பவன். அதனால் இறைவன் என்ற பெயர் வந்தது. இறைதங்குதல். ”பார்க்கும். இடம் எங்கும். நீக்கமற நிறைகின்ற பரிபூரணன் அவன்”. அவன் அவ்வாறு எங்கும் நிறைந்திருப்பதை நாம் காண முடிவதில்லை. “பிரபஞ்சம் இயங்குவதைப்: பார்க்கும். பேரது ஜடமாகிய இதை உடனிருந்து இயக்குபவன் ஒருவன் இருக்க வேண்டும். அவனே இறைவன்.

இறைவன் இவ்வாறு பொதுவாக, எல்லா உயிர்களையும் . சுழற்றி விட்டாலும் சில உயிர்களுக்குச் சிறப்பான நலத்தைச் செய்கிறான். மற்ற உயிர்களைப் போலப் பிறப்பதும் உலகியலில் சிக்கித் தடுமாறுவதும் இறப்பதுமாக இராமல், தமக்கு என்றும் உறவாக உள்ளவன் இறைவன் என்பதை, . அந்த உயிர்கள் உணர்சின்றன.

இறைவனுடைய உண்மையை. உணர்ந்த மெய்யன்பர்களே அவ்வு யிர்கள் தம் டம்பை, நம் கண் காணத்தந். தந்தை, இங்கே இருந்தாலும் உண்மையாகத் தம் பிறப்புக்கு மூலகாரணமாக இருப்பவன் இறைவனே என்பதை உணர்ந்தவர்கள் அவர்கள். ஒவ்வொரு பிறவியிலும் எடுக்கும் உடம்புக்கு ஏற்றபடி ஒவ்வொரு தகப்பன் அமைகிறான், இறைவனோ எந்தப் பிறவியிலும் நமக்குத் தந்தையாக இருக்கிறான், .

தந்தை, தன் மகன் .அறிவுடையவனாகத் திகழ வேண்டுமென்றும், நன்றாக வாழவேண்டுமென்றும் எண்ணி அவனுக்கு வேண்டியவற்றையெல்லாம் தருகிறான். மகன், தந்தையின்: _ விருப்பப்படி ஒழுகாவிட்டால் அத்தந்தை அவனை: ஒறுத்து நல்ல வழியில் நிற்கச் செய்கிறான், மகனை ஒறுக்கும் தந்தையைப்பார்க்கும் போது, அவன் கொடியவனாகத் தோன்றுகிறான். ஆனால் தற்ன்தயின் நோக்கம், மகனைத் திருத்த வேண்டும். என்பதுதான்.

உயிர்க்கூட்டங்கள் அறியாமை நீங்கி

மெய்யறிவு பெற்று உய்ய வேண்டும் என்பதற்காக இறைவனும் எவ்வளவோ நலன்களைச் செய்திருக்கிறான். அறிவுமிக்க மனிதப் பிறவியை: அளித்து, இனிப் பிறவாத நிலையை அடைவதற்கு ஏற்ற: வழிகளை. நல்லோர்களின் வா யிலாகக் காட்டுகிறான். நல். வழியில் நடவாத உயிர்களுக்கத் துன்பம் தந்து ஒறுக்கிறான்.

தந்தை, தான் பெற்ற செல்வத்தைத் தன் மக்களுக்குக். கொடுக்க விரும்புவான். இறைவனும், தன் அருளாகிய செல்வத்தை மக்களுக்கு வாரி வழங்கச் சித்தமாக இருக்கிறான். பொல்லாத குழந்தைகள், தந்தையை விட்டுப்: பிரிந்து இன்னல் உறுவதைப், போல அறியாமை உள்ளவர்கள், இறை நெறியினின்றும் விலகி இடர்ப்படுவார்கள்

துன்பம். இன்றி இன்பம் பெற்று வாழவேண்டும் என்றே. யாவரும் விரும்புகிறார்கள். விரும்புவது வேறு; அதற்காக முயன்று அதை அடைவது. வேறு. எளிதாகப் பணம் சம்பாதிக்கத் தவறான வழிகளில் புகுகிறவர்களுக்கு இறுதியில் தண்டனையே. கிடைக்கிறது. அதுபோல உரிய வழியில். போகாமல் பெற்ற உடம்பையும் 'வாழ்நாளையும் நேரிய முறையில் ஈடுபடுத்தாமல். இன்பத்தை நாடிப்போகிறவர்களுக்கு. இறுதியில் துன்பமே. கிடைக்கிறது... யாரை அடைந்தால் நம் துன்பம் நீங்கும்?" என்பதைத். தெரிந்து கொள்ள வேண்டும்

"மனிதர்கள் யாவரும். குறை உடையவர்களே! அந்தக் குறைகளில் சிறிது, பெரிது. என்ற. வேறுபாடு இருக்கும். இருந்தாலும்: குறை. குறைதானே?. குறை இருக்கும். வரையில் மனநிறைவு இராது. துன்பம் நீங்காது. கவலையே இருக்கும். அது போக வேண்டுமானால் குறைவிலா நிறைவாகிய ஆண்டவனை அணுக வேண்டும்.

நம் குறையை அவன் தீர்ப்பாள்,இவன் தீர்ப்பான் என்று யார் யாரையோ.. நம்பும் வழக்கம் நம்மிடம் இருக்கிறது. திரௌபதியைத் துச்சாதனன் மானபங்கம் செய்ய முற். பட்டான். அவளுக்குப் பாதுகாப்பாகக் கணவர் ஐவர். 'இருந்தனர். அப்போது அவர்களை நம்பிப் பயன் இல்லாமல் போயிற்று. அவையிலிருந்த உறவினர்களை நம்பினாள். அவர்களும். செயலற்றவர்களாக இருந்தார்கள். பெரியவர்கள். இருந்தார்கள். அவர்களை நோக்கி. முறையிட்டாள்... அவர்களாலும்: அவளுக்கு நலம் செய்ய முடியவில்லை. "தன் கையே தனக்கு உதவி என்று இரு கைகளாலும் ஆடையைப் பற்றிக்கொண்டாள். அப்போதும் துச்சாதனனின் மூரட்டுத் தனத்தை மாற்ற முடியவில்லை. கடைசியில், "நீதான் சரண்": என்று கண்ணனையே புகலாக அடைந்து கை குவித்தாள். அவன் அப்போது அங்கே இல்லை. 'இல்லையென்றா நினைப்பது? அவன் இல்லாத இடம் ஏது? "இவனையன்றி வேறு புகல் இல்லை" என்ற: உறுதியோடு, 'கோவிந்தா!" என்று அரற்றியபோது அவளுக்குப் பாதுகாப்புக் கிடைத்தது... ஆடை நீண்டு கொண்டே போ

யிற்று.துச்சாதனன் கைகள் சவித்தன.

யாரிடம் மனப்பூர்வமாக முறை யிடவேண்டும்: என்பது தெரிந்தபோது பாஞ்சாலிக்கு உதவி கிடைத்தது. அவன்தான் அப்படி உதவி செய்யமுடியும்.

இதை இறைவனுடைய அன்பர்கள். நன்கு அறிவார்கள். குழந்தையை யாராவது அடித்தால், "அம்மா!" என்று தான் அழும், அம்மாவே. அடித்தாலும், : "அம்மா!" என்று தான் அழும், அப்படியே பக்தர்களுக்கு உலகிலுள்ளவர்களால் துயரம் வந்தாலும் வேறு வகையாகக் துன்பம் வந்தாலும் இறைவனையே நோக்கி விண்ணப்பிப்பார்கள். நைந்து புலம்புவார்கள். இரங்குவார்கள் "எம். தந்தையே" என முறையிடுவார்கள். அந்த முறையீட்டைக் கேட்டு ஆண்டவன், சும்மா இருப்பானா? எவ்வளவு கொடிய துயரமானாலும் அதை உடனே மாற்றிவிடுவான்.

இறைவனை நோக்கி,. "எம் தந்தையே, அப்பா, பரமபிதாவே" என்று நைந்து உருகி இரங்குபவர்கள் அன்பர்கள். அவர்கள் தமக்குப். பற்றுக்கோடாக வேறு யாரையும் பற்றுவதில்லை... இறைவன். ஒருவனே புகலிடம் என்று புகுவரார்கள், அது அவர்களுக்கு இயல்பு. அன்பின் நிலை அது. அவர்கள் குரலைக் கேட்டு, யாருக்கு வந்த வத்த விருந்தோ இது? என்று புறக்கணியாமல் உடனே அவர்களுடைய துயரத்தை. மாற்றுகிற கருணையாளன் இறைவன். அவன் ஒருவன்தான் அப்படிச் செய்யமுடியும்.

பொதுவாக, உயிர்க் கூட்டங்களின் வினைக்கு ஈடாக அவர்களைத் தோற்றுவித்தும் உடம்பினின்றும் பிரித்தும் செயல் புரியும் இறைவன், சிறப்பாகத் தன்னையன்றி வேறு யாரையும். புகலாக அடையாத அன்பர்களைத். துன்பத்தினின்றும் விடுவித்து, நலம் அருளுவான் என்ற கருத்தை இந்தப் பாட்டில் காரைக்காலம்மையார் வெளியிடுகிறார்.

"இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான் தோற்றி
இறைவனே ஈண்டு இறக்கம் செய்வான் – இறைவனே
எந்தாய் எனஇரங்கும் எங்கள்மேல் வெந்துயரம்
வந்தால் அதுமாற்று வான்."

இது அற்புதத் திருவந்தாதியில் 5ஆம் பாடல்.

## திருமந்திரம்

அறுத்தன ஆறினும் ஆனின மேவி
அறுத்தனர் ஐவரும் எண்ணிலி துன்பம்
ஒறுத்தன வல்வினை ஒன்றல்ல வாழ்வை
வெறுத்தனன் ஈசனை வேண்டிநின் றானே.

**பொழிப்புரை:** அறுசுவையினை மிகுதியும் விரும்பி உண்பவன் கழிபேரிரையான் என்று கருதப்படுவான். அதனால் அவன் ஆனின முதலிய விலங்கினத்தோடு ஒப்பன். அச்சுவைகளும் அவனைத் துன்பத்தில் ஆழ்த்தின. ஐம்புல வேடரும் அளவிலாத் துன்பத்தில் ஆழ்த்தினர். முற்செய்த வல்வினையும் கடுமையாகத் தண்டித்தன. இவற்றினின்றும் விலகி இன்புற வேண்டுமென்று அருளால் துணிந்த ஒருவன் சிவபெருமான் திருவடியினை வேண்டி நின்றான். அதனால் அவற்றை வெறுத்தனன்.

# தானமாகத் தன்னையே ஈந்த ததீசி முனிவர்



**தேனம்மை இலக்குமணன்,**
காரைக்குடி

சரஸ்வதி நதி ஓடிக்கொண்டிருந்த வேத காலம் அது. வாய்மைக்கும் தவத்துக்கும் சீலத்துக்கும் பெயர்பெற்ற ததீசி முனிவர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவரின் பெற்றோர் அதர்வண மகரிஷி, சிட்டிதேவி ஆவர். ததீசி முனிவர் தன் தவ பலத்தால் சுக்கிரனிடம் இருந்து மிருத சஞ்சீவி பெற்றவர். மேலும் அவர் சிவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்து வஜ்ஜிரம் போன்று உறுதியான உடல் மற்றும் எலும்புகளைப் பெற்றார்.

ததீசி முனிவரின் மனைவி சுவர்ச்சா. அவர் தன் மனைவியுடன் சேர்ந்து ஔபாசனம், அக்னி ஹோத்ரம், தேவர்கள் பூஜை, பிதுர்க்கள் பூஜை, அதிதி பூஜை அனைத்தையும் நியம நிட்டை தவறாது செய்துவந்தார். இவருக்கும் ஒரு சோதனை வந்தது. தன் சோதனையினால் பலருக்கும் நன்மை ஏற்படும் என்பதால் எதற்கும் கலங்காமல் தன் வஜ்ஜிர யாக்கையைத் துறந்து தன்னையே கொடையாக அளிக்க அவர் முன்வந்தார்.

ஒரு முறை தேவலோகத்துக்கு தேவகுருவான பிரகஸ்பதி வருகை புரிந்தார். அப்போது அவர் வருகையை மதிக்காமல் அமர்ந்திருந்த இந்திரனைப் பார்த்து அதிருப்தி அடைந்த பிரகஸ்பதி தேவலோகம் விட்டு நீங்கினார்.

தேவகுரு இல்லாமல் தேவலோகத்தின் அன்றாடக் கடமைகள் முடங்கின. எனவே அவர்கள் பிரம்மாவிடம் யோசனை கேட்டனர். துவஷ்டா என்பவர் தைத்தியர் குலத்தின் பிரஜாபதி. இவரின் மூத்த மகன் மூன்று தலைகள் கொண்ட விசுவரூபன். இவனை தேவகுருவாக வைத்துக் கொள்ளும்படிப் பிரம்மா கூறினார். விசுவரூபனிடம் கேட்டபோது அவனும் தேவகுருவாக இருக்க ஒப்புக் கொண்டு தேவர்களை வழி நடத்தினான்.

விசுவரூபனின் ஒரு தலை உண்ணவும், ஒரு தலை பருகவும், மூன்றாவது தலை யாகத்தில் கிடைக்கும் சோம ரசத்தைப் பருகவும் பயன்பட்டது. மேலும் யாகத்தின் போது கிடைக்கும் ஆஹுதிகளைத் தேவர்களுக்கு மட்டும் வழங்காமல் தன் இனத்தைச் சேர்ந்த தைத்தியர்களுக்கும் அவன் வழங்கி வந்தான். இதைக் கண்டு கோபமுற்ற இந்திரன் விசுவரூபனின் மூன்று தலைகளையும் வெட்டினான்

இதனால் கடுங்கோபமடைந்த விசுவரூபனின் தந்தை துவஷ்டா இந்திராதி தேவர்களை அழிக்க மாபெரும் யாகம் நடத்தினான். அதில் விருத்திராசூரன் தோன்றினான். அவன் பிரம்மாவை வேண்டிக் கடுந்தவம்புரிந்தான். பிரம்மா அவனின் தவத்தை மெச்சி அவன் முன் தோன்றினார். அவன் அவரிடம், “பஞ்ச பூதங்களாலும், மரம் மற்றும் உலோகத்தால் தயாரிக்கப்பட்ட எந்த ஒரு ஆயுதத்தாலும் எனக்கு அழிவு



நேராதிருக்கும்படி வரம் தர வேண்டும்" என்று வேண்டினான். பிரம்மாவும் அவனுக்கு அவ்வாறே வரம் வழங்கினார்.

அதன் பின் தன் தந்தையாக கருதத்தக்க துவஷ்டாவின் விருப்பப்படித் தன் அண்ணன் விசுவரூபனைக் கொன்ற இந்திரனையும் தேவர்களையும் தேவலோகத்தில் இருந்து விரட்டி அடித்தான். இந்திரனின் யானையான ஐராவதத்தையும் கையகப் படுத்தினான். இந்திராதிதேவர்கள் விஷ்ணுவைச் சரணடைந்தனர். "எந்த ஆயுதத்தாலும் அழிக்க முடியாதவன் விருத்திராசூரனை அழிக்க வேண்டும். அதற்கு ஒரே வழி வஜ்ஜிரம் போல் யாக்கை பெற்ற ததீசி முனிவர். அவரின் முதுகெலும்பைப் பெற்று அதனைக் கொண்டு ஆயுதம் தயாரித்து அதன் மூலம் விருத்திராசூரனை வெல்லலாம்" என்று இந்திரனிடம் விஷ்ணு யோசனை கூறினார்.

'என்னது ஒரு முனிவரிடம் அவர் உயிரோடு இருக்கும்போதே அவரது முதுகெலும்பைக் கேட்பதா. என்னதான் அனைத்தும் துறந்த முனிவர் என்றாலும் உயிரோடு தன் முதுகெலும்பை எடுத்துக் கொள்ளச் சம்மதிப்பாரா' என்று பல்வேறு ஐயங்கள் இந்திரனுக்கு. ஒருவழியாகத் தேவர்களை அழைத்துக் கொண்டு ததீசி முனிவரின் குடிலுக்கு வந்தான் இந்திரன்.

குடிலை விட்டு வெளியே வந்த ததீசி முனிவர் இந்திரனும் தேவர்களும் தன் குடிலைச் சுற்றி அமர்ந்திருப்பதைப் பார்த்தார். இத்தனைபேர் தன்னைப் பார்க்க வந்திருப்பது எதற்காக இருக்கும் என்பதை அவரால் யூகிக்க முடியவில்லை. ஒரு வழியாகத் துணிச்சலைத் திரட்டி இந்திரன் தான் வந்த நோக்கத்தைக அவரிடம் கூறினான்.

எல்லாவற்றையும் கேட்ட முனிவர் ஒரு கணம் கூட யோசிக்கவில்லை. தேவர்களின் நன்மைக்காகத் தனது யாக்கையைத் துறந்து முதுகெலும்பைத் தருவதாகக் கூறினார். அதன் பின் யோகத்தில் அமர்ந்து உயிர் நீத்தார். விசுவகர்மாவின் துணையுடன் அவரது முதுகெலும்பைக் கொண்டு வஜ்ஜிராயுதம் தயாரிக்கப்பட்டது. அந்த வஜ்ஜிராயுதத்தை எடுத்துக் கொண்டு விருத்திராசூரனுடன் போருக்குச் சென்றான் இந்திரன்.

இந்திரனை வென்ற செருக்கில் இருந்த விருத்திராசூரன் இந்திரன் தன்னை அழிக்க வஜ்ஜிராயுத்தோடு வருவான் என்பதை எதிர்பார்க்கவில்லை. இருவருக்கும் இடையில் நடந்த போரில் இந்திரனின் வஜ்ஜிராயுதத்துக்குப் பலியானான் விருத்திராசூரன்.

எத்தனையோ பேர் எத்தனையோ தானங்கள், தியாகங்கள் புரிந்திருக்கின்றார்கள். ஆனால் அவை அனைத்தும் ததீசி முனிவர் தேவர்களின் நலனுக்காகத் தன் உடல் உறுப்பை உயிரோடு இருக்கும்போதே தானமாக வழங்கிய தியாகத்துக்கு ஈடாகாது. அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு.

# சிவாலயங்களின் சிறப்புகள் - 5



**வே.இராமசாமி,** B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

## திருவெண்காடு

நாகை மாவட்டம் பூம்புகார் அருகில் 10 கிலோமீட்டர் தொலைவில் திருவெண்காடு திருத்தலம் அமைந்துள்ளது. இது ஒரு புதன் பரிகார ஸ்தலம். இங்கு சிவபெருமான் சுயம்பு மூர்த்தியாக அருள் பாலிக்கிறார். தேவாரப் பாடல் பெற்ற ஸ்தலம். காவிரி கரையில் உள்ள பதினோராவது ஸ்தலம். அம்மனின் 51 சக்தி பீடங்களில் இது பிரணவ சக்தி பீடமாகும்

இத்திருத்தலத்திற்கு ஆதி சிதம்பரம் என்ற பெயர் வழங்கப்படுகிறது

சிதம்பரத்துக்கு முன்பாக தோன்றிய ஸ்தலம் என்பதால் ஆதி சிதம்பரம் என்று அழைக்கப்படுகிறது. சிலம்பு+ அரவம். சிவபெருமான் சிலம்பு அணிந்து ஆடும் பொழுது ஏற்பட்ட அரவம் ஒலி எனவே இதற்கு சிலம்பு அரவம் என்ற பெயர் ஏற்பட்டு பிற்காலத்தில் மருவி சிதம்பரம் என அழைக்கப்பட்டது.



இங்கு நடராஜருக்கு சபையும் ரகசியமும் உள்ளது. இங்கு உள்ள ஸ்படிக லிங்கத்திற்கு தினசரி நான்கு காலமும் அபிஷேகம் நடைபெறும் . சிதம்பரத்தைப் போலவே நடராஜர் சன்னதிக்கு அருகில்

பெருமாள் சன்னதி உள்ளது

சிவபெருமான் பார்வதிக்காக நடனமாடிய ஒரே ஸ்தலம். இங்கு சிவன் ஒன்பது விதமான நடனங்களை ஆடினார்.

1. ஆனந்த தாண்டவம்
2. சந்தியா தாண்டவம்
3. திரிபுரதாண்டவம்
4. ஊர்த்துவ தாண்டவம்
5. புஜங்க தாண்டவம்
6. முனி தாண்டவம்
7. பூத தாண்டவம்
8. சுத்த தாண்டவம்
9. சிருங்காரத் தாண்டவம்

காசியில் விஷ்ணு பாதம் அமைந்திருப்பதைப் போல் இங்கு ருத்ரபாதம் அமைந்துள்ளது. காசிக்கு இணையான ஆறு ஸ்தலங்களில் முதன்மையான ஸ்தலம் திருவெண்காடு ஆகும் மற்ற ஸ்தலங்கள் திருவையாறு மயிலாடுதுறை திருவிடைமருதூர் ஸ்ரீவாஞ்சியம் சாயாவனம்

பித்ரு சாபங்கள் நீக்கும் ஸ்தலங்கள் இந்தியாவில் எட்டு உண்டு.. ஆறு ஸ்தலங்கள் வட இந்தியாவில் இரண்டு தமிழகத்திலும் உள்ளது. அவை திருவெண்காடு ராமேஸ்வரம்

திருவெண்காட்டில் அனைத்தும் மூன்றாக உள்ளது

மூன்று சுவாமிகள் சுவேதாரண்யேஸ்வரர், நடராஜர், அகோர மூர்த்தி



தீர்த்தங்கள் 3 அக்னி தீர்த்தம்,சூரிய தீர்த்தம் ,சந்திர தீர்த்தம் (சிவபெருமானின் கண்களில் இருந்து தோன்றிய மூன்று பொறிகள் மூன்று குளமாக மாறி உள்ளது)

மூன்று அம்பாள் காளி, துர்க்கை ,பிரம்ம வித்யாம்பிகை

மூன்று தல விருட்சம் ஆலமரம், கொன்றை மரம், வில்வமரம்

நவக்கிரக தலங்களில் இது புத பகவானுக்கு உரிய ஸ்தலம் பக்தர்கள் புதபகவானுக்கு பச்சை வஸ்திரம் சாத்தி வெண்காந்தாலள் மலர் சூட்டி பாசிப்பருப்பில் காரம் சேர்த்து நெய்வேத்தியம் செய்கிறார்கள்

இங்கு உள்ள அம்பாள் பிரமனுக்கு வித்தை கற்பித்ததால் பிரம்ம வித்யாம்பிகை என்ற பெயர் பெற்றாள். கல்வியில் சிறந்து விளங்க பிரம்ம வித்யாம்பிகையை வழிபடலாம்

இங்கு உள்ள நந்தி கொம்பு உடைந்த

நிலையில் உடலில் ஒன்பது இடங்களில் சூலாயுதத்தால் குத்துப்பட்டு சோகமான நிலையில் அமர்ந்திருப்பர்

அப்பர் சுந்தரர் ஞானசம்பந்தர் மாணிக்கவாசகர் ஆகிய நால்வராலும் பாடல் பெற்ற ஸ்தலமாகும்.

முருகப்பெருமான் இங்கு நான்கு திருக்கரங்களுடன் காட்சி தருகிறார்

இங்கு தட்சிணாமூர்த்திக்கு அருகில் பிரம்மதேவர் கூப்பிய கரங்களுடன் அமர்ந்திருப்பது அறிய காட்சி ஆகும்.

இத்தலத்து திருவெண்காடர்தான் பட்டினத்தாரை வசீகரித்தவர்.

எமனை சம்ஹாரம் செய்த ஸ்தலங்கள் இரண்டு ஒன்று திருக்கடவூர் மற்றொன்று திருவெண்காடு

நவகிரகங்கள் ஒன்பது பேரும் ஒரே வரிசையில் ஒரே திசையை நோக்கி காட்சி தருகிறார்கள்

சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட கோயில் இது. அதற்கு உதாரணம் வால்மீகி ராமாயணத்தில் திருவெண்காட்டைப் பற்றிய ஒரு குறிப்பு வால்மீகி எழுதியுள்ளார். யமனை ஸ்வேதாரண்ய க்ஷேத்திரத்தில் சுவேதாரண்யேஸ்வரர் வதம் செய்ததைப் போன்று கர, தூஷண அரக்கர்களை ராமபிரான் வதம் செய்தார்.” என்று வால்மீகி ராமாயணம் திருவெண்காட்டு இறைவனைக் குறிப்பிடுகின்றது

சிவபெருமானின் 64 வடிவங்களில் 43 வது வடிவம் அகோரமூர்த்தி. திருவெண்காட்டில் அகோரமூர்த்தி தரிசனம் சிறப்பு வாய்ந்தது. இந்தியாவில் வேறு எந்த சிவாலயத்திலும் இத்தகைய அகோர மூர்த்தியை காண இயலாது. சிவபெருமானின் பஞ்சப்பிரம மூர்த்தங்களுள் தென்முகமாக இருப்பது அகோரமூர்த்தியாவர். இத்திருவுருவம் இத்தலத்தில் மட்டுமே உள்ளது.

அகோர மூர்த்தி எட்டு கைகளில் ஏழு ஆயுதங்களை ஏந்திய படி அருள் தருகிறார் அவை கத்தி உடுக்கை கபாலம் வேதாளம் கேடயம் மணி திரிசூலம் ஆகிய ஆயுதங்கள் ஆகும். சிறந்த ஆடை அணிந்து நெற்றி கண்ணில் நெருப்பைக் கக்கிய படி கோரைப்பற்கள் உடன் 14 நாகங்களை அணிந்தபடி காட்சி தருகிறார்

அப்பர் தான் பாடிய தூண்டு சுடர் மேனி என்ற திரு தாண்டகத்தில் சொல்லப்பட்டவை அனைத்தும் அகோர மூர்த்தியின் திருவுருவில் காணலாம்

உற்சவர் அகோர மூர்த்திக்கு பக்தர்கள் பன்னீரால் அபிஷேகம் செய்கிறார்கள்

தமிழகக் கோவில் மரபுகளில் இசைக்குத் தனி இடம் உண்டு. ஒவ்வொரு கோவிலுக்கும் தனித்தனி இசை மரபு உள்ளது. உதாரணமாக திருவெண்காடு கோவிலில் சுவாமி புறப்பாட்டின் போது முதலில் மோகனம் வாசிக்கப்பட்டு அதன்பிறகே மல்லாரி வாசிக்கப்படும். அந்தக் கோவிலில் உள்ள அகோரமூர்த்திக்கு மோகனம் உகந்த ராகம்.

ஆகவே இப்படி ஒரு மரபு அங்கே பின்பற்றப்படுகிறது. அதே காரணத்தால் அந்த ஊரில் வேறு எந்த இடத்திலும் மோகன ராகம் பாடப்படுவதுமில்லை வாசிக்கப்படுவதும் இல்லை.

திருவெண்காட்டுக்கோவிலில் ஸ்ரீ அகோரமூர்த்தி புறப்படும் போது மல்லாரியில் தேர் மல்லாரி வாசிக்கப்பெறுகின்றது. திருச்செங் காட்டாங்குடித் திருவிழாவில் சுவாமி

பிக்ஷாடனராக எழுந்தருளும் போது இரண்டே அடிகளைக் கொண்ட மல்லாரி இசைக்கப்பெறுகின்றது.

## அகோரமூர்த்தி எப்படி உருவானார் என்ற வரலாறு:

மருத்துவாசுரன் என்னும் அசுரன் பிரம்ம தேவரிடம் பெற்ற வரத்தால் தேவர்களுக்குப் பல துன்பம் விளைவித்தான். சிவபெருமான் அருளியபடி தேவர்கள் திருவெண்காட்டில் வேற்றுருவில் வாழ்ந்து வந்தனர். அசுரன் வெண்காட்டிற்கும் வந்து போர்ச் செய்ய, வெண்காட்டீசர் முதலில் நந்தியை ஏவினார். அசுரன் நந்தியிடம் தோற்றுப்பின் சிவபெருமானை நோக்கித் தவமிருந்து, சூலாயுதத்தை வேண்டிப் பெற்று மீண்டும் போருக்கு வந்து நந்தியைச் சூலத்தால் தாக்கி காயங்களை ஏற்படுத்தினார்.

இதுபற்றி நந்தி, திருவெண்காடரிடம் முறையிட, அவர் கோபம் கொண்டார். அப்போது அவருடைய ஐந்து முகங் களில் ஒன்றாகிய அகோர முகத்தினின்று அகோரமூர்த்தி தோன்றினார். அகோர உருவைக் கண்டமாத்திரத்திலேயே மருத்துவாசுரன் சரணாகதி அடைந்து தோத்திரம் செய்தான். சரணடைந்த மருத்துவாசுரனை அகோரமூர்த்தியின் காலடியில் காணலாம். காயம் பட்ட இடபதேவரைச் சுவேதாரண்யேசுவரர் ஆட்கொண்டார். இன்றும் இக்கோவிலின் நிருத்த மண்டபத்தில் சிலை வடிவில் இதை காணலாம்.

மாசி மாதம் கிருஷ்ணபட்சம் பிரதமை திதி, பூர நட்சத்திரம் ஞாயிற்றுக்கிழமை இரவு 12.00 மணிக்கு அகோரமூர்த்தி தோன்றினார். இதே காலத்தில் ஆண்டுதோறும் அகோரமூர்த்தி மருத்துவாசுரனை அடக்கும் ஐந்தாம் திருவிழாவாக நடைபெறுகிறது. ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமை இரவிலும் அகோரபூஜை நடைபெற்று வருகின்றது. கார்த்திகை மாத ஞாயிற்றுக் கிழமைகளில் மிக விசேஷமாக பூஜை நடைபெறுகின்றது

## இங்கு நடைபெறும் திருவிழாக்கள்

1. சித்திரை மாதம் திருவோண நட்சத்திரத்தில் நடராஜர் அபிஷேகம்.

2. வைகாசி மாதம் வெள்ளை யானைக்குச் சாப விமோசனம் அளித்தல்

3.ஆனி மாதம் உத்திர நட்சத்திரத்தில் நடராஜர் அபிஷேகம்.

4.ஆடி மாதம் பட்டினத்தாருக்குச் சிவதீட்சை அளித்தல் அம்பாளுக்கு ஆடிப்பூரம் பத்து நாட்கள் உற்சவம்

5.ஆவணியில் நடராஜர் அபிஷேகமும் கோகுலாஷ்டமியும் விநாயகர் சதுர்த்தியும் சிறப்பாக கொண்டாடப்படும்

6. புரட்டாசி மாதம் தேவேந்திர பூஜையும் நவராத்திரி விழாவும் நடைபெறும்

7.ஐப்பசி மாதம் கந்தர் சஷ்டி விழா

8. கார்த்திகை மாதம் அகோர மூர்த்திக்கு மகா ருத்ரா அபிஷேகம் மற்றும் கார்த்திகை தீபத் திருவிழா

9. மார்கழி திருவாதிரையில் நடராஜர் ஆருத்ரா தரிசனம்

10. தை மாதம் மகர சங்கராந்தி விழாவும்

11. மாசி மாதம் 13 நாட்கள் பிரம்மோற்சவம் இந்திர விழா மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

12.பங்குனி மாதம் அகோர மூர்த்திக்கு இலட்சார்ச்சனைச் சிறப்பாக நடைபெறும்.

# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

அருள்மிகு நடராசப் பெருமானுக்கு நடைபெறும் ஆறு அபிஷேகங்களில் ஒன்றான மாசி மாத சதுர்த்தசி திதி மகா அபிஷேகம் நமது தென் சபாநாயகர் கோயிலில் 22.02.2024 அன்று மாலை சிறப்பாக நடைபெற்றது.

அதே போல 8.03.2024 அன்று மகா சிவராத்திரியை முன்னிட்டு மாலை ஸ்ரீ ஆதிமூலநாதர் சிறப்பு அபிடேக வழிபாடும், இரவு நான்கு கால படிகலிங்க அபிடேக வழிபாடுகளும் மிகச் சிறப்பாக நடைபெற்றன. ஒவ்வொரு கால வழிபாட்டிலும் ஏராளமான பக்தர்கள் கலந்து கொண்டு தரிசனம் செய்தனர்.

மகா சிவராத்திரியை முன்னிட்டு முதலாம் ஆண்டு நாட்டியாஞ் சலியும் நமது கோயிலில் நடைபெற்றது. பங்குபெற்ற நடனக் கலைஞர்கள், மாணவியருக்கு நமது ஆதீனம் அவர்கள் நர்மதேஸ்வரர் (சுயம்பு) லிங்கம் வழங்கி ஆசிர்வதித்தார்கள்.

**சிவராத்திரி அபிடேகத்தையும் அதை ஒட்டி நடைபெற்ற நாட்டியாஞ்சலியையும் காணொளியாகப் பார்க்க இந்த லிங்கை கிளிக் செய்யவும்** 

*****

## பங்குனி மாத வழிபாடுகள்

| | | | |
|---|---|---|---|
| 17.03.2024 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 20.03.2024 | வளர்பிறை ஏகாதசி | மாலை | பெருமாள் வழிபாடு |
| 22.03.2024 | பிரதோஷம் | | |
| 24.03.2024 | பங்குனி உத்திரம் | மாலை | ஆறுமுகர் வழிபாடு |
| 2.04.2024 | தேய்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 6.04.2024 | பிரதோஷம் | | |
| 12.04.2024 | வளர்பிறை சதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |

# ஆண்டவர் குருபூஜை

உ
சிவமயம்

**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் (காரைக்குடி)
அனுப்பிய

## திருமுகம்

நம் கோவிலூர் வேதாந்தத் திருமடத்தின் நிறுவனரும் ஆதி குருவும் ஆகிய கோவிலூர் ஆண்டவர் என்றழைக்கப்பெறும் ஸ்ரீ ல ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகரின் 177வது குருபூஜை வரும் சோபகிருது வருடம் பங்குனி மாதம் 11ம் தேதி (24.03.2024) ஞாயிற்றுக்கிழமை சிறப்பாக நடைபெறும். யாவரும் வந்து தரிசித்துக் குரு அருளும் திரு அருளும் பெற வேண்டியது.

*குறிப்பு :*

23.03.2024 சனிக்கிழமை காலை 9.00 மணிக்கு கம்பவாரிதி இலங்கை திரு.ஜெயராஜ் அவர்கள் முன்னுரையுடன், காரைக்குடி திருநாவுக்கரசர் இறைபணி மன்றத்தாரால் திருவாசக முற்றோதல் நிகழ்த்தப்பெறும்.

வேணும்
ஸ்ரீ சற்குருநாதன் துணை

# காரைக்கால் அம்மையார் குருபூஜை

உ

சிவமயம்




## காரைக்கால் அம்மையார் குருபூஜை

பங்குனி மாதம் சுவாதி நட்சத்திரம் காரைக்கால் அம்மையார் குருபூஜை நாள். அன்று நம் மடத்திலிருந்து திருவாலங்காடு கோவிலில் சென்று வழிபாடு செய்து சுமார் 500 முதல் 600 பேருக்கு அன்னதானம் செய்வது வழக்கம் .

இந்த ஆண்டு 28 3 2024 அன்று இந்த குரு பூஜை வருகிறது நம் அன்பர்கள் திருவாலங்காட்டிற்கு சென்று வழிபட இயலுமானால் அங்கு சென்று வழிபடவும்.

கோவிலூரில் அண்மையில் நம் மடத்தில் காரைக்கால் அம்மையார் திருமேனி பிரதிஷ்டை செய்திருப்பதால் இந்த ஆண்டு முதல் கோவிலூரிலும் இந்த குருபூஜை வழிபாடு நடைபெறும் . அன்று காலை திருநாவுக்கரசர் இறை பணி மன்றத்திலிருந்து அன்பர்கள் வந்து காரைக்கால் அம்மையார் பதிகங்களை முற்றோதல் செய்வார்கள் வழிபாடு முடிந்தபின் மகேஸ்வர பூஜை நடைபெறும்.

எந்த இடத்தில் அன்பர்களுக்கு கலந்து கொள்ள வசதியோ அந்த இடத்தில் இந்த குருபூஜை பங்கு கொண்டு காரைக்கால் அம்மையார் அருள் பெற வேண்டுகிறோம்.

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

அவர்களிடத்தில் அன்பர்கள் கேட்ட வினாக்களும் அதற்கு அவர்கள் அளித்த விளக்கங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கேட்டுப் பயன்பெற வேண்டுகிறோம்.

வினா 1 — விளக்கம்

முருகனை தமிழ் கடவுள் என்று சொல்லுகிறார்களே. இந்தக் கருத்து சரியானதா?

வினா 2 — விளக்கம்

நம் சைவத்தில் பல்வேறு உருவங்களை வழிபாட்டுக்கு வைத்திருக்கிறோம். மூலப் பரம்பொருள் ஒன்றாய் இருக்க இவ்வாறு பல்வேறு உருவங்களை வழிபடுவதைப் பற்றி உங்கள் கருத்து என்ன.

வினா 3 — விளக்கம்

நாம் நடத்துகின்ற யாகங்களிலும் அபிடேகங்களிலும் பால் மற்றும் உயர்ந்த திரவியங்களை பெருமளவில் பயன்படுத்துகின்றோம். இவற்றையெல்லாம் ஏழைகளுக்குக் கொடுக்காமல் வீணடிப்பதாக ஒரு கருத்து நிலவுகிறது. இது குறித்த உங்களது விளக்கத்தை அறிய ஆவலாய் இருக்கிறோம்.

# பயிற்சிப் பேழை

பல அன்பர்களின் வேண்டுகோளுக்கு இணங்க திருமுறைகளும் திருப்புகழும் நாம் எளிதாக பாராயணம் செய்யும் விதமாக ஒலி ஒளி காட்சியாக இந்த இதழிலிருந்து அறிமுகம் செய்கிறோம்.

திருமுறை பயிற்சி ஆசிரியர் கலைமாமணி திருத்தணி சாமிநாதன் அவர்களும் திருப்புகழ் பயிற்சி ஆசிரியர் கரூர் பழனியப்பன் அவர்களும் எளிதாக பின்பற்றக் கூடிய வகையில் பாடி இருக்கிறார்கள் அதற்குரிய பாடல் வரிகளை நீங்கள் திரையில் பார்த்து கொண்டே பாராயணம் செய்யலாம்.

இந்த இதழில் முதலாம் திருமுறையில் முதல் பதிகமும் திருப்புகழில் ஐந்து பாடல்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன அடுத்த அடுத்த இதழ்களில் அன்பர்களின் விருப்பத்திற்கு இணங்க பாடல் எண்ணிக்கை விரிவுபடுத்தப்படும்

## முதலாம் திருமுறையும், திருப்புகழும் இந்த இதழில் துவங்குகிறோம்

திருமுறை

திருப்புகழ்

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள "கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்" சுமார் 40,000 நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

archive.org/details/@koviloor_andavar_library

INTERNET ARCHIVE

Koviloor Andavar Library

(no description yet)

UPLOADS LISTS POSTS REVIEWS COLLECTIONS WEB ARCHIVES

3,075 Results

Sort by: Weekly views Title Date archived Creator

Year Published 1836 - 2024

Media Type: texts 2,649; image 277; audio 147; collection 1; movies 1

தேவாரம் வேதசாரம் by ஸ்ரீ காசிவாசி சாம்பவஸ்ரீ செந்திநாதையர்

திராவிட வேதத்திரட்டும் ஸ்தலமான்மியச் சுருக்கமும் by கயப்பாக்கம்-சதாசிவ செட்டியார்

தேவாரப் பண்முறைக் கட்டளை விளக்கம் by உமாபதி சிவாசாரிய சுவாமிகள்

ஸகல காரிய சித்தியும் சைவத் திருமுறைகளும் by கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார்,ஆங்கீரஸ சு....

திருமுறைகளில் அகக் கோட்பாடு by டாக்டர் பழ.முத்தப்பன்

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 2840 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 150 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். விரைவில் நாள் ஒன்றுக்கு சுமார் 700 பக்கங்களை சேர்க்கும் பணி நடந்து கொண்டிருக்கிறது.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தில் சென்ற மாதத்தில் மட்டும் சுமார் 60 நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மிகவும் அரிதான சில நூல்கள் இப்போது பதிவேற்றம் செய்யப் படுகின்றன.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி 

திருநெல்லை – ஐப்பசி 

திருநெல்லை – கார்த்திகை 

திருநெல்லை – மார்கழி 

திருநெல்லை – தை 

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இணைய வழி திங்களிதழைப் பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.



திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் kovilooromadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.